Regd. No. M.7897

NAVAMANI (Tamil Daily) MADRAS

COMPLIMENTARY CO[PY]

Phone No. 76199

"நவமணி"

சந்தா விகிதம்

1—9—74 முதல் தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. 8-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

# நவமணி

ஆசிரியர்: சோலை

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

ஆபாசப் படம்:
பல லட்சம்
கொள்ளை
4-ம் பக்கம்

மலர் 16 இதழ் 224 ★ சென்னை 27—4—76 செவ்வாய் ★ வெளியூர் 28—4—76 புதன் ★ 4 பக்கம் 25 காசு

## இஸ்லாமியசொத்துக்களை நிர்வகிக்கும்

# வக்ப்போர்டு முறைகேடு

## கவர்னரிடம் மனு

**சென்னை, ஏப், 27—தமிழகத்தில் இஸ்லாமிய சமுதாயச் சொத்துக்களை நிர்வகிக்கும் வக்ப் போர்டில் முறைகேடுகள் நடந்து இருப்பதாக தமிழக கவர்னரிடம் புகார் மனு கொடுக்கப்பட்டு இருக்கிறது.**

சென்னை மாவட்ட முஸ்லிம் லீக் தலைவர் எஸ். ஏ. காஜா மொய்தீன் இந்தப் புகார் மனுவை அளித்தார்.

ஏற்கனவே குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமதுவிடம் தமிழக வக்போர்டில் நடந்த முறைகேடுகள் பற்றி விரிவாக எடுத்துக் கூறப்பட்டு இருக்கிறது.

சென்ற ஐந்து ஆண்டுகளாக தமிழ்நாடு வக்போர்டு (வாரியம்) செயல்பட்டுவந்த முறை பற்றி இஸ்லாமிய சமுதாயத்தில் பரவலான அதிருப்தி இருந்து வந்தது.

இந்த வாரியத்தில் உறுப்பினர்களாக உள்ள நேர்மையான மனம்படைத்தஇரண்டு மூன்று உறுப்பினர்களும் வாரியம் செயல்பட்டு வந்த முறைபற்றியும், இதர உறுப்பினர்கள் நடத்திய பேரம் பற்றியும், அதன தலைவர் டாக்டர் அமீருத்தின் செயல்பட்ட முறைபற்றியும் தமது கண்டனத்தை அவ்வப்போது தெரிவித்து வந்திருக்கிறார்கள்.

பள்ளிவாசல் நிர்வாகத்துக்காக, மதரசாக்களின் பராமரிப்புக்காக வழங்கப்பட்ட சொத்துக்கள், உண்டாக்கப்பட்ட அறநிலையங்கள்ஒழுங்காக செயல்படுவதை கண்காணிப்பதற்காக வக் போர்டு உருவாக்கப்பட்டது.

### கட்டிடத்தை காணோம்

திருச்சிராப்பள்ளியில் ஒரு தொழிற் பயிற்சி பள்ளி ஆரம்பிப்பதாக சுமார் நான்கு ஆண்டுகளுக்கு முன்னர் அன்று மத்திய அமைச்சராகவும் இன்று ஜனாதிபதியாகவும் விளங்கும் ஜனாப் பக்ருத்தீன் அலி அகமதுவைக் கொண்டு வாரியத்தின் தலைவர் அமீருத்தின் அடிக்கல் நாட்டு விழா நடத்தினார். நான்கு ஆண்டுகளுக்குப்பிறகு கூட அந்த தொழிற் பயிற்சி கூடத்துக்காக ஒரு செங்கல் கூட எடுத்துவைக்கப்படவில்லை என்று கூறப்படுகிறது.

ஆனால், அந்தப் பயிற்சிக் கூடத்தின் பெயரால் பலலாயிரக் கணக்கான ரூபாய்கள் பள்ளிவாசல் நிர்வாகிகளான முத்தவல்லிகளிடமும் மற்றும் வக் போர்டின் தயவை நாடிய தனவந்தர்களிடமும் வசூலிக்கப்பட்டிருப்பதாகத் தெரிய வருகிறது. ஆனால் இது சம்பந்தமான எந்த முறையான கணக்கும் எவரிடத்திலும் சமர்ப்பிக்கப்படவில்லை என்று கூறப்படுகிறது.

மதுரையில் உள்ள வக் போர்டு கல்லூரி நிர்வாகம் பற்றியும் பல புகார்கள் கூறப்படுகின்றன.

இதற்கு மத்தியில் இந்த வக்போர்டின் காலம் மே மாதம் 23 ம் தேதியுடன்முடிவடைகிறது. தற்போதைய தலைவர் அடுத்த போர்டிலும் இடம்பெற வேண்டுமென்று பெரிதும் முயற்சி எடுத்து வருகிறார் என்று கூறப்படுகிறது.

### டெல்லி யாத்திரை

அண்மையில் அவர் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்தார். பொறுப்பு மிக்க பெரிய தலைவர்களைச் சந்திக்க டெல்லி சென்று வந்தார்.

திருச்சி மாவட்டத்தின் பழையகாங்கிரஸ்கமிட்டியின் துணைத் தலைவராக இருந்த கொண்டே அப்போது திமுக வேட்பாளர் அன்பில் தர்மலிங்கத்துக்கு இவர் தேர்தல் வேலை செய்தவராம். பரம்பரை தேசியவாதிகள் இது பற்றி தமிழ்நாடு காங்கிரஸ் தலைமையிடம் முறையிட்டு இருப்பதாகவும் தெரிகிறது.

### மீண்டும் விழாவா?

இந்த மாதம் குடியரசு தலைவர் நாகூர் தர்காவுக்கு சென்று திருச்சி வழியாக சென்னை திரும்ப இருந்த நேரத்தில் வக்போர்டு வாரிய பதவிக்கால பூர்த்திவிழா என்று ஒரு விழாவை ஏற்பாடு செய்து அதில் ஜனாதிபதி அவர்களையே பங்குபெறச் செய்ய தலைவர் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டாராம்.

அதேசமயத்தில் வக்போர்டு ஊழல்பற்றி ஒரு மனு குடியரசுத் தலைவரிடம் சமர்ப்பிக்கப்பட்டது. அதனால் கடைசி நேரத்தில் திருச்சியில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த விழா ரத்து செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது.

ஜனாதிபதி அவர்கள் வக்பு வாரியத்தில் நடக்கும் ஊழல்களை பசரச் சட்டத்தை முற்றும் பயன்படுத்தி களைய வேண்டுமென்று பெங்களூரில் பேச்சு முறைகட்டுக நடந்து கொண்டவர்களுக்கு பெரிதும் கலக்கத்தை அளித்திருப்பதாக தெரியவருகிறது.

இதுகு மத்தியில் சென்னை மாவட்ட முஸ்லிம் லீக் தலைவர் ஏ. காஜா மொய்தின் வாரியம் செயல்பட்ட முறை பற்றி விசாரிக்க ஒரு கமிஷன் நியமிக்கவேண்டுமென்று கவர்னரிடம் ஒரு மனு அளித்து இருக்கிறார். இதுபற்றி குடியரசுத் தலைவரிடம் விரிவாக எடுத்துரைத்து இருப்பதாகத் தெரிகிறது.

## 2 கிலோ புதையல் தங்கம் எங்கே?

மதுரை, ஏப். 27—நிலத்தை உழும்போது விவசாயி ஒருவருக்கு தங்கப் புதையல் ஒன்று கிடைத்தது.

இது அதிகாரிகளிடம் ஒப்படைக்கப்படவில்லை என்று கூறி கவர்னருக்கு மகஜர் அனுப்பப்பட்டிருக்கிறது.

மதுரையை அடுத்த திருமங்கலம் தாலுக்காவில் பின்னிங்கலம் கிராமத்தில் பெரியகருப்பன் என்பவருக்கு இந்தப் புதையல் கிடைத்ததாம். பெரிய கருப்பனின் மாமனார் முத்துக்கோனார்என்பவருக்குச் சொந்தமானது இந்த நிலம்,

புதையலில் 2 கிலோ தங்க மும் 3 படி அளவு வெள்ளிக் காசுகளும் இருந்தனவாம்.

இந்தப் புதையலை பெரிய கருப்பன் அதிகாரிகளிடம் ஒப்படைக்கவில்லை என்று கூறி, முத்துக்கோனார் தாசில்தாரரிடம் புகார் தெரிவித்திருக்கிறார். புகாரின் நகல்களை கவர்னர், போலீஸ் சூப்பிரண்டெண்ட் ஆகியோருக்கும முத்துக்கோனார் அனுப்பியிருக்கிறார். ஆனால் இதுவரை அதிகாரிகள் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை என்று முத்துக்கோனார் கூறினார்.

புதையல் கண்டெடுக்கப்படும்போது தனது தாயாரும் அதை பார்த்ததாக முத்துக்கோனார்தெரிவித்திருக்கிறார்.

2-ம் பத்தி தொடர்ச்சி

வரப்பட்ட 116 கோடி ரூபாய் மதிப்புள்ள அந்நியப் பொருள்கள் கைப்பற்றப்பட்டன.

சென்னை மற்றும் சுற்றுப் புறங்களில் 345 கடைகளில் திடீர் சோதனைகள் நடத்தப்பட்டன.

1974—75ம் ஆண்டில் 157 பேர்களை கைது செய்தோம் அவர்களில் 88 பேர் மீது வழக்கு தொடரப்பட்டது. அதில் 47 பேர்களுக்கு தண்டனை விதிக்கப்பட்டுள்ளது.

1975—76-ம் ஆண்டில் 186 பேர் கைது செய்யப்பட்டனர். அவர்களில் 141 பேர்கள் மீது வழக்குத் தொடரப்பட்டு 103 பேர்களுக்கு தண்டனை வழங்கப்பட்டுள்ளது.

1976ம்ஆண்டுமார்ச் மாதம் 31ம் தேதிவரை தமிழ்நாட்டில் 359 பேர்களை காவலில் வைக்க உத்தரவிடப்பட்டுள்ளது.

இவர்களில் 284 பேர் காவலில் வைக்கப்பட்டனர்.

இவ்வாறு சுங்க இலாகா கலெக்டர் சங்கரன் நிருபர்களிடம் கூறினார்.

## வறட்சி நிவாரணப் பணிகளில்

## தி. மு. க.வினர் செய்த

# பயங்கர ஊழல்

## மூப்பனார் தகவல்

**சென்னை, ஏப். 27—தி. மு. க. ஆட்சி காலத்தில் வறட்சி நிவாரணப் பணிகளில் பயங்கர ஊழல் நடந்திருக்கிறது என்று தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் கருப்பையா மூப்பனார் கூறினார்.**

திருச்சி மாவட்டத்தில் தமது சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு, இன்று சென்னை திரும்பிய மூப்பனார் அறிக்கையொன்றை வெளியிட்டுள்ளார்.

அந்த அறிக்கையில் கூறப்பட்டிருப்பதாவது—

தமிழ்நாட்டில் தொடர்ந்து 2-வது ஆண்டாக வறட்சி நிலை ஏற்பட்டுள்ளது.

நமக்கு கிடைத்திருக்கும் செய்திகளில் இருந்து தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலும் வறட்சி ஏற்பட்டிருக்கிறது.

கடந்த ஆண்டு தி மு க ஆட்சியில வறட்சி நிவாரணப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன. இந்த பணிகளில் ஊழல் நடந்திருக்கிறது. கடந்த ஆண்டுவறட்சி நிவாரணப் பணிகள் முறையாக அமுல்நடத்தப்பட்டிருந்தால் தற்போது இத்தகைய நிலை ஏற்பட்டிருக்காது. இந்த ஆண்டு வறட்சியின் கடுமை ஓரளவு தணிக்கப்பட்டிருந்தாலும் வறட்சி நீடிக்கிறது

### 19 கோடி

வறட்சி நிவாரணப் பணிகளுக்கு ரூ. 19 கோடி செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. தி.மு.க. ஆட்சி காலத்தில் ரூபாய் 26 கோடி செலவிடப்பட்டது. எனவே தற்போது ரூ. 19 கோடி மதிப்பிடப்பட்டிருப்பது சிக்கனமானதே.

இந்த தொகையை உடனடியாக மத்திய அரசு ஒதுக்கீடு செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

வறட்சி நிவாரணம் முதல் கட்ட பணிகள் இராமநாதபுரம், நெல்லை, மதுரை ஆகிய மாவட்டங்களில் நடைபெறும்.

### ஜனாதிபதி ஆட்சி

ஜனாதிபதி ஆட்சி காலத்தில் தமிழகத்தில் வறட்சி நிவாரணப் பணிகள் புறக்கணிக்கப்படுகின்றன என்ற எண்ணம் மக்களுக்கு ஏற்பட்டுவிடக் கூடாது.

இது சம்பந்தமாக கவர்னரின் ஆலோசகரான ஆர். வி. சுப்பிரமணியன், கா. திரவியம் ஆகியோர்களுடன் விவாதித்தேன்.

தமிழகத்தில் உள்ள பெரும் தொழில் நிறுவனங்கள் அறக்கட்டளைகள் போன்றவைகள் இந்த நிவாரணப் பணிகளில் தங்களால்இயன்ற பங்குதனை ஆற்றவேண்டும்.

குறிப்பாக பெரிய தொழில் நிறுவனங்கள் சில கிராமங்களை எடுத்துக்கொண்டு அங்கு குடிதண்ணீர் வசதிசெய்து தருதல் போன்ற பணிகளில் ஈடுபடவேண்டும்.

தமிழ்நாடு காங்கிரஸ் செயற்குழு நிறைவேற்றியுள்ள தீர்மானத்தின் அடிப்படையில் மாநிலங்களில் வறட்சி நிவாரணப் பணிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

எனவே மதிப்பீடு செய்யப்பட்டுள்ள ரூ. 19 கோடியை மத்திய அரசு உடனடியாக ஒதுக்கீடுசெய்து தமிழகத்தின் வறட்சியை தணிக்க முன்வர வேண்டும்.

இவ்வாறு மூப்பனார் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

## அன்பழகன் செயலாளர்

# கிருஷ்ணசாமி தகப்பனுருக்கு நிபந்தனை ஜாமீன்

**சென்னை, ஏப். 27—அன்பழகனின் செயலாளர் கிருஷ்ணசாமியின் தகப்பனார் வெங்கடசாமி நிபந்தனை ஜாமீனில் விடப்பட்டுள்ளார்.**

முன்னாள் அமைச்சர் அன்பழகனின் செயலாளர் கிருஷ்ணசாமி வருவாய்க்கு அதிகமாக சொத்து சேர்த்ததாகவும், அதற்கு அவரது தகப்பனார் வெங்கடசாமி நாயுடு உடந்தையாக இருந்தாகவும் லஞ்ச சதிக் குற்றச்சாட்டின் கீழ் விசேஷ கோர்ட்டில் வழக்குத் தாக்கல் செய்யப்பட்டுளளது.

இவர்கள் சார்பில் தாக்கல் செய்யப்பட்ட ஜாமீன் மனுக்கள் விசேஷக் கோர்ட்டிலும் பிறகு உயர் நீதி மன்றத்திலும் ஏற்கனவே தள்ளுபடி செய்யபட்டது.

இன்று கிருஷ்ணசாமியின் தந்தை வெங்கடசாமி சார்பில் புதிய ஜாமீன் மனு தாக்கல் செய்யப்பட்டது.

வெங்கடசாமி வயது முதிர்ந்தவர். 75 வயது ஆனவர். சிறை வாசம் அவரது உடல் நிலைக்கு ஒத்துக் கொள்ளாது என்று ஜாமீன் மனுவில் குறிப்பிடப்பட்டு இருந்தது.

அரசாங்க வக்கீல் கே. குழந்தைவேலு இது பற்றி குறிப்பிட்ட போது ஜாமீனில் விடுவது என்றால் நிபந்தனையின் மீது விடுவதில் ஆட்சேபம் இல்லை என்றார்.

வெங்கடசாமி நாயுடு சார்பில் ஆஜரான வழக்கறிஞர் கே. ராமசாமி அந்த நிபந்தனையை ஏற்றார்.

நீதிபதி எஸ். நடராஜன் நிபந்தனை மீது வெங்கடசாமியை ஜாமீனில் விட உத்திரவிட்டார்.

ஜாமீன் காலத்தில் அவர் பெங்களூரில் இருக்க வேண்டும். வாரம் ஒரு முறை பெங்களூர் கண்டோன்மெண்ட் போலீஸ் நிலையத்தில் ஆஜராக வேண்டும் என்றும் உத்திரவிடப்பட்டுள்ளது.

# கடத்தல் மன்னர்கள் 8 பேர் சொத்து பறிமுதல்

சென்னை, ஏப். 27—சென்னையில் 8 கடத்தல்காரர்களின் சொத்துக்களை பறிமுதல் செய்ய உத்தரவிடப்பட்டிருககிறது.

சென்னை சுங்க இலாகா கலெக்டர் சங்கரன் இதுபற்றி நிருபர்களிடம் கூறியதாவது!

"சென்னையில் 8 கடத்தல்காரர்களின் சொத்துக்களை பறிமுதல் செய்ய உத்தரவு இடப்பட்டிருக்கிறது. அவர்களின் பெயர்கள் வருமாறு:-

(1) மித்தலால், (2) ஆர். வி. பண்டாரி, (3) ஆர். டி. ஷா, (4) ஜபர்சந்த், (5) பரஸ்மல் பஹ்ஜி, (6) சம்பலால, (7) ரஞ்சித்மால், (8) ஜபருல்லா.

இப்பொழுது கள்ளக்கடத்தல் குறைந்துஉள்ளது. படகுகளின் மூலமும், விமானம் மூலமும் கடத்தல் செய்வதைக் கண்காணிப்பு செய்யப்பட்டு வருகிறது.

கிழக்கு கடற்கரை முழுவதிலும் கடத்தல் தடுப்பு நடவடிக்கையில் ஈடுபட்டுள்ளவர்களுடன் தொடர்பு கொள்ள "ஒயர்லெஸ்" வசதி ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

தலைமறைவாக உள்ள மேலும் 35 நபர்களுடைய சொத்துக்களை பறிமுதல் செய்யநடவடிக்கை எடுக்கும்படி உத்தரவிடப்பட்டுள்ளது,

கள்ளக் கடத்தலில் 2 முறைக்குமேல் தண்டனை அடைந்தவர்கள் 2 லட்சத்திற்கு மேல் கடத்தல் பொருட்களுடன் பிடிபட்டவர்களுடைய சொத்துக்களை கைப்பற்றவும் நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது கடத்தல்காரர்களுக்கு உதவும் நபர்கள் 12 பேர்களுடைய 17 டெலிபோன இணைப்புகள் துண்டிக்கப்பட்டுவிட்டன.

1975-76 ம் ஆண்டில் கள்ளக்கடத்தலாகவும் சட்ட விரோதமாகவும் கொண்டு

4-ம் பத்தி பார்க்க

# மெய்வழிச்சாலையில் வைரப்புதையல்

மதுரை, ஏப். 27—புதுக்கோட்டை மாவட்டம் அனவாசல் அடுத்த மெய்வழிச் சாலையில் வைரமும் பொன்னும் வைக்கப்பட்டிருக்கலாம் என் அதிகாரிகள் யூகிக்கிறார்கள் என்று மதுரையில் சுங்க இலாகா உயரதிகாரி ஒருவர் நிருபர்களிடம் கூறினார்.

மெய்வழிச் சாலையை கட்டி ஆண்ட சாலை ஆண்டவர் தனைப்பின்பற்றிய அனந்தர்களுக்கு "எது கிடைத்தாலும் எப்போது கிடைத்தாலும் அதை பூமியிலேயே புதைத்து வையுங்கள்" என்று உத்திரவிட்டிருந்தாராம்.

அதிகாரிகள் நடத்திய தொடர் விசாரணையில் அனந்தர்கள் இப்படிக் கூறவே வைரங்களும் பதுக்கிவைக்கப்பட்டிருக்கலாம் என்று அதிகாரிகள் யூகிக்கின்றனர்.

குன்றக்குடியில் சுங்க அதிகாரிகள் நடத்திய சோதனை பற்றி குறிப்பிட்ட அந்த அதிகாரி, குன்றக்குடியில் நடத்திய சோதனையில் தங்கம், வைரம் போன்ற எதுவும் கிடைக்கவில்லை என்றும் ஆனால் அங்கு பல தஸ்தாவேஜிகள் கிடைத்ததாகவும் அவைகளை வருமானவரி இலாகாவினர் ஆய்வு செய்து வருவதாகவும் கூறினார்.

திருப்பாச்சேத்தியில் நடந்த சோதனையில் மேல் விபரம் ஏதும் உண்டா? என்று கேட்டபோது 'இல்லை' என்ற அதிகாரி எல்லா இடங்களிலும் சந்தேகப்பட்ட அனந்தர்களின் இருப்பிடங்களை சோதனை செய்து வருவதாகக் கூறினார்.

நாளை
கருணாநிதிக்கு
சம்பத்
பதில்

## நூதனமாக பதுக்கிவைத்து 2 மாதத்தில் ரூ. 50 லட்சம் லாபம்

# புளி வியாபாரிகள் பயங்கர மோசடி

(நமது செய்தியாளர் இஸ்மாயில்)

மதுரை, ஏப். 27—குறைந்த விலைக்கு வாங்கிய சரக்கை இருப்பு வைத்துக்கொண்டே அவ்வப்போதைய விலைக்கு லாபத்திற்கு விற்றதாகவும், மார்க்கெட் விலைக்கு விவசாயிகளிடம் இருந்து திரும்ப வாங்கியதாகவும் மாற்றி மாற்றி கணக்கை மட்டும் எழுதி ரூ. 50 லட்சம் வரை புளி வியாபாரிகள் லாபம் அடைந்துள்ளதாகத் தெரிகிறது.

மதுரையிலும், விருதுநகரிலும் உள்ள பிரபல புளி வியாபாரிகள் அரசையும், பொது மக்களையும் ஏமாற்றி இப்படி பயங்கர மோசடி செய்து கொள்ளை லாபத்தை அடைந்துள்ளனர்.

சாதாரணமாக தமிழ் நாட்டில் வாங்கிய விலையையும் போக்குவரத்து செலவுகளையும் சேர்த்து கொள்முதல் கணக்காக காட்டி நியாயமான லாபத்தை வைத்து நியாயமான வியாபாரிகள் வியாபாரம் செய்வார்கள்.

சில பேராசை பிடித்த வியாபாரிகள் கொள்முதல் விலையில் இருந்து அதிகமான லாபத்தை வைத்து விற்பார்கள். சிலநடுத்தர வியாபாரிகள் குறைந்த விலைக்கு வாங்கிய சரக்கை பதுக்கி வைத்து விலை ஏறும் போது அதிக விலைக்கு அதே சரக்கை பில்போட்டு விற்பார்கள்.

இப்படிப்பட்ட வியாபாரிகள் அவர்களுடைய கணக்கு மூலமாகவே வணிக வரி அதிகாரிகளிடம் சிக்கிக்கொள்வார்கள்.

### மோசடி வியாபாரிகள்

ஆனால் பெரும் மோசடி செய்து அரசு அதிகாரிகளிடமும் சிக்காமல் பொது மக்களையும் சுரண்டும் வியாபாரிகள் நூதன வழி ஒன்றைக் கண்டு பிடித்துள்ளனர்.

அதன் விவரம் வருமாறு:-

மதுரை, விருதுநகரைச் சேர்ந்த சில பிரபல புளி வியாபாரிகள் கடந்த 2 மாதங்களுக்கு முன்பு ஆந்திராவில் இருந்து டொம்கூர் புளியைக் குறைந்த விலைக்குக் கொள் முதல் செய்திருக்கிறார்கள்.

ஆனால் அந்தப் புளியை உடனே விற்றால் லாபம் கிடைக்காது என்பதால் அதை பதுக்கிவைத்து விலை ஏறட்டும் என்று காத்திருந்தனர்.

ஆனால் அப்படி பதுக்கிவைப்பதிலிருந்து சட்டப்பூர்வமாக தங்களைக் காப்பாற்றிக்கொள்வதற்காக தினசரி கிடங்கில் இருக்கும் சரக்குகளை நியாய விலையில் விற்றதாக பலபினாமி பெயர்களில் பில்களைப் போட்டுக் கிழித்து குப்பைத் தொட்டியில் எறிந்துவிடுவார்களாம். பிறகு விற்பனை செய்து விட்டதாக கணக்கிலும் எழுதி விடுவார்களாம்.

### போலிக் கொள்முதல்

அதிகாரிகள் திடீர் சோதனைக்கு வந்தால் கோடவுனில் இருப்பு அதிகமாக இருப்பது தெரிந்து விடுமே என்பதற்காக பின்னர் போலி பில்கள் போடும் அதே நேரத்தில் கிராம விவசாயிகளிடம் இருந்து அன்றைய மார்க்கெட் விலைக்கு புளிக கட்டுகளை கொள் முதல் செய்தது போலவும் கணக்கு எழுதி விடுவார்களாம்.

இப்படிச் செய்தால் அதிகாரிகள் திடீர் சோதனை செய்தாலும் கணக்கிற்கும் இருப்பிற்கும்சரியாக இருக்கிறது. எனவே, இவர் நியாயமான வியாபாரி என்று சொல்லி விடுவார்கள் என்பதற்காகத் தான்.

### பெரும் மோசடி

ஆனால், அந்தக் கொள்ளை லாபப் பேர்வழிகள் அரசையும் அதிகாரிகளையும் ஏமாற்ற மேற்கண்ட நூதன மோசடி வேலைகளை கடந்த 2 மாதமாகச் செய்து வந்திருக்கிறார்கள்.

இதனால் புத்தகத்தில் மட்டுமே விற்றதாகவும் வாங்கியதாகவும் கணக்கு இருந்ததால் வெளிமார்க்கெட்டில் தட்டுப்பாடு ஏற்பட்டு புளியின் விலை திடீரென்று 100 சதவிகிதம் உயர்ந்துவிட்டது.

வாயைத் திறந்துகொண்டு வாய்ப்பை எதிர்பார்த்திருந்த அந்த பெரு முதலைகள் இது தான சந்தர்ப்பம் என்று பார்த்து இருந்த மிகைக் குறைந்த விலை கொள் முதல் சரக்கை மிக அதிக விலைக்கு விற்று விட்டனர்.

### கொள்ளை லாபம்

இதனால் இந்த புளி வியாபாரத்தில் ஈடுபட்ட மிக சாதாரண வியாபாரிக்கு ரூ. 50 ஆயிரம் லாபமாம். இன்னும் கொஞ்சம் பெரிய வியாபாரிக்கு ரூ 3, 4 லட்சங்கள் லாபமாம். அதைவிடப் பெரிய வியாபாரிக்கு ரூ. 15 லட்சம் லாபமாம். மதுரையில் உள்ள ஒரு பிரபல வியாபாரிக்கு சுமார் அரைகோடி ரூபாய் லாபமாம்.

### அதிகாரிகள் கடமை

இந்த நிலையில் சின்னச் சின்ன வியாபாரிகளையே அடிக்கடி சுற்றிவரும் வணிக வரி அதிகாரிகள், உணவுப் பிரிவு போலீஸ் துறையினர் இந்த பெரும் கொள்ளைலாபக் காரர்களை மிகவும் தீவிரமாக கண்காணிக்க வேண்டியது அவசியம்,

எந்தப் பொருளின் விலை ஏறினாலும் அந்தப் பொருள் விற்பனையில் மொத்தமாக ஈடுபட்டுள்ள பெரும் வியாபாரிகள் சிலரைப் பிடித்து குறைந்தது ஒரு மாதத்துக்கு முந்திய கொள்முதல் கணக்கில் இருந்து சோதனை செய்தால் அவர்கள் குட்டு வெளிப்பட்டு விடும் என்று கூறுகிறார்கள்.

### மிசா

தவிர இப்படிப்பட்ட பேர் வழிகள்மீது அரசை மோசடி செய்து கணக்கு எழுதியதாகவும் பொதுமக்களைச சுரண்டியதாகவுமே வழக்குப் பதிவு செய்து "மிசா" போன்ற சட்டத்தின் கீழ் வழக்குத் தொடர்ந்தால் விலை தானாக சரியும் என்றும் லசி நியாயமான வியாபாரிகள் கூறுகிறார்கள்.

## ரஷிய ராணுவ மந்திரி திடீர் மரணம்

மாஸ்கோ, ஏப். 27—ரஷிய நாட்டு ராணுவ மந்திரி ஆண்டிரி கிரக்கோ நேற்று திடீரென்று மரணமடைந்தார். அவருக்கு வயது 72.

இந்தத் தகவலை ரஷிய செய்தி நிறுவனமான டாஸ் நேற்று வெளியிட்டது.

மார்ஷல் கிரக்கோ திடீரென்று மரணமடைந்து விட்டதாக 'டாஸ்' அறிவித்தது. அவர் இறந்ததற்கான காரணங்களை டாஸ் வெளியிடவில்லை.

மாரடைப்பு காரணமாக மார்ஷல் கிரக்கோ திடீரென்று மரண மடைந்து இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

"ரஷிய கம்யூனிஸ்டு கட்சியில் பிரபலமான முக்கியஸ்தர் கிரக்கோ. வீரஞ்செறிந்த போர்வீரர், கம்யூனிஸ்ட் கட்சி பொலிட்பீரோ உறுப்பினர். ரஷிய நாட்டின் மாவீரன் என இரண்டுமுறை பெயர் எடுத்த ராணுவ மந்திரி கிரக்கோ இன்று திடீரென்று மரணமடைந்தார்" என்று டாஸ் நேற்று அறிவித்தது.

கடந்த ஆண்டு இந்தியாவிற்கு விஜயம் செய்தார் மார்ஷல் கிரக்கோ.

## அண்ணா தி. மு. க. மேதின விழா

சென்னை, ஏப். 27-அண்ணா தி.மு.கழக தொழிற்சங்கங்களின் சார்பாக மே முதல் நாள் வடபழனி எம்.ஜி.ஆர். பள்ளிமைதானத்தில்தொழிற் சங்கச் செயலாளர் ராகவானந்தம் தலைமையில் மேதின விழா நடைபெறுகிறது. அண்ணா திமுகழகதுணை பொதுச்செயலாளர் நாஞ்சில் மனோகரன், பாலாபழனூர் புலவர் இந்திர குமாரி, அண்ணா திமுகழகம், தொழிற் சங்க அமைப்பாளர்கள் இந்த விழாவில் பேசுகிறார்கள்.

### சி. ஐ. டி. யூ.

சி.ஐ.டி.யூ. தொழிற் சங்கங்கள் சார்பாக மே முதல் நாள் சென்னை கோகலே மண்டபத்தில் மே தின விழா நடைபெறுகிறது. அகில இந்திய சி. ஐ. டி. யூ. சங்கத் துணைத் தலைவர் சமர் முகர்ஜி பங்கு கொள்கிறார்.

பென்டன் தொழிற் சங்கத் தலைவர் மனோகரன், இந்துஸ்தான் டெலிபிரிண்டர் தொழிற் சங்கத் தலைவர் நந்தகோபால், சென்னை தொழிலாளர் சங்கப் பொதுச் செயலாளர் ஆர். கணபதி, ஓட்டல் தொழிலாளர் சங்கத் தலைவர் எஸ். வெங்கட்ராமன ஆகியோர் விழாவில் பங்கு கொள்கின்றனர்.

## ரேஸ் செய்தி

### ஊட்டி ரேசுக்கு டிப்ஸ்

ஊட்டி, ஏப். 27— நாளை ஊட்டியில் நடைபெறும் ரேசுக்கான டிப்ஸ் விவரங்கள் கீழே தரப்படுகின்றன.

1. சேலம் பிளேட்

டிப்ஸ்:
1. போர்ட் ராயல்
2. மீட்டர்ஸ்காட்

2. ஒலவகோட் பிளேட்

டிப்ஸ்:
1. ராயல் ரூட்
2. ஓபிரான்

எதிர்பாராத வெற்றி: ஸ்கூபி டு

3. நீலகிரி கோப்பை

டிப்ஸ்:
1. மேக் ய டபுா
2. சன் ஸ்டிரீக்

4. கோத்தகிரி பிளேட்

டிப்ஸ்:
1. ரவி கிரான்
2. சக்திஸ்ரீ

எதிர்பாராத வெற்றி: தி ஹெர்மிட்

5. போதனூர் பிளேட்

டிப்ஸ்:
1. ஹை ஹேவன்
2. லாயல் ரோமன்

எதிர்பாராத வெற்றி: நோபிள் வெஞ்சர்

6. சோழா பிளேட்

டிப்ஸ்:
1. டோண்ட் ஒரி
2. அலிஸ் கிஸ்

எதிர்பாராத வெற்றி: சாய்ஸ்ரீ

### நிச்சய வெற்றி ராயல் ரூட்

ஜாக்பாட்: 2, 3, 4, 5, 6-வது ரேசுகள்

டிரபிள்: 4, 5, 6-வது ரேசுகள்

7-ம் பத்தி தொடர்ச்சி

கிறேன். இது போலவே பஞ்சாயத்துக்கள், நகராட்சிகள், பல்வேறு வாரியங்கள் கூட்டுறவு அமைப்புகள் ஆகியவற்றிலும் திமுக ஆட்சியின் போது நடைபெற்றுள்ள ஊழல்களையும் விசாரிக்க தனித்தனி விசாரணைக் கமிஷன்கள் அமைக்கவேண்டுகிறேன்.

இப்படி அமைக்கப்படும் விசாரணைக் கமிஷன்களுக்கு தேவையான சகலவிதமான தகவல்களையும் சேகரித்துத் தரும் பொறுப்பும் நம் காங்கிரஸ் தொண்டர்களைச் சாரும். அப்படி சேகரிக்கும் தகவல்கள் அடங்கிய ஒரு நகலை சம்பந்தப்பட்ட கமிஷன்களுக்கும் மற்றொரு நகலை தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்கும் நமது காங்கிரஸ் தொண்டர்கள் கவனமுடன் அனுப்பி வைக்க உடனடியாக இன்று முதலே செயல்படவேண்டுகிறேன்.

இவ்வாறு ப. நெடுமாறன் கூறினார்.

# ஊழல் பேர்வழிகளை ஒழித்துக்கட்டுக: நெடுமாறன் அறைகூவல்

சென்னை, ஏப். 27—மும்முனை போராட்டத்தில் முதல் கட்டப் போராட்டமான ஊழல் ஆட்சியை அகற்றுவதில் வெற்றி பெற்றிருக்கிறோம். இரண்டாவது கட்டமாக அதிகாரத்தில் உள்ள ஊழல் பேர்வழிகளையும், மூன்றாவது கட்டமாக காங்கிரசில் உள்ள ஊழல் பேர்வழிகளையும் களைந்தாகவேண்டும் என்று தமிழ்நாடு காங்கிரஸ் செயலாளர் நெடுமாறன் கூறினார்.

திருச்சியில் தேவர் ஹாலில் நடைபெற்ற பாராட்டு விழாவில் தமிழ்நாடு காங்கிரஸ் பொதுச் செயலாளர் ப. நெடுமாறன் பேசியதாவது:

திமுகழகம் இன்று அடைந்திருக்கிற சீரழிவுக்கு என்ன காரணம் என்பதை நாம் சிந்திக்கவேண்டும். கழகத்தின் பொறுப்புகளிலிருந்த ஊழல் பேர்வழிகளே அதன் சீரழிவுக்கு காரணமாவார்கள். கழகம் எதிர்க் கட்சியாக இருந்த போது அண்ணாத்துரையின் தாட்சண்யம் காரணமாக சமூக விரோதிகள் பலர் மாவட்டச் செயலாளர் போன்ற முக்கிய பொறுப்புகளில் அமர்ந்து விட்டனர். இவர்களால் கழகத்திற்கு எந்த ஆபத்தும் வந்து விடாது என்று அண்ணாதுரை அப்போது நினைத்தார்.

ஆனால் நாளடைவில் இந்த ஊழல் பேர் வழிகள் கழகத்தில் ஆதிக்கம் பெற்றனர். திமுகழகம் ஆட்சிப் பொறுப்புககு வந்த பின்னர் இந்தப் பேர் வழிகளின் அட்டகாசங்கள் எல்லை மீறின. கட்சியையும் ஆட்சியையும் ஊழல் முடை நாற்றம் எடுக்கச் செய்தவர்கள் இந்த நபர்கள்தான். அண்ணாத்துரையாலேகூட அப்போது இந்தப் பேர்வழிகளைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. மற்றவர்களாலும் முடியாமல் போயிற்று.

அதன் விளைவாக மக்கள் மத்தியில் செல்வாக்கிழந்து இன்று கழகம் அழிவை எதிர் நோக்கி நிற்கிறது. ஆனால் அதே நேரத்தில் மறைந்த நமது தலைவர் காமராஜ் நமது காங்கிரஸ் கட்சியை எப்படி நடத்தினர் என்பதை பார்க்க வேண்டும்.

காங்கிரஸ் கட்சியின் பொறுப்புகளில் நாணயம், நேர்மை, தியாகம், தொண்டுள்ளம் உள்ளவர்களாகப் பார்த்து தேர்ந்தெடுத்து அவர்களையே அந்தந்த பொறுப்புகளில் அமர்த்தினர். ஊழல் பேர்வழிகளை கட்சிப் பொறுப்புகளுக்கு வர விடாமல் அவர் விரட்டி அடித்தார். அதனால்தான் காங்கிரஸ் கட்சியின் வலிமை குறையாமல் கட்டுப்கோப்பான ஒரு ஸ்தாபனமாக அவரால் உருவாக்க முடிந்தது. இதை நாம் என்றைக்கும் மறந்து விடமுடியாது.

இருள்ள நிலையில் காங்கிரஸ் இணைந்த பிறகு நமது பலம் என்ன என்பதும் எதிர்க் கட்சியின் பலம் என்ன என்பது 144 தடையுத்தரவு நீக்கப்பட்ட பிறகுதான் தெரியும். அப்படி 144 தடை உத்தரவு நீக்கப்படும்போது எதிர்க் கட்சிகளை எதிர்க்க நமது காங்கிரஸ் கட்சியின் அமைப்பை பலப்படுத்தியாக வேண்டும்.

### மூன்று கட்டப் போராட்டம்

நமது போராட்டம் மூன்று கட்டமாக அமைந்துள்ளது. முதலாவதாக ஊழல் ஆட்சியை அகற்றுவது. அதனை பிரதமர் இந்திரா அற்புதமாக சாதித்துக் கொடுத்துவிட்டார். இரண்டாவதாக அதிகார வர்க்கத்திலுள்ள ஊழல் பேர்வழிகளை அடையாளம் கண்டு ஒழித்துக் கட்ட வேண்டும். கட்சியின் அமைப்புகள் தான் இந்தக் காரியத்தைச் செய்ய முடியும். செய்யவும் வேண்டும். மூன்றாவதாக நமது கட்சியிலுள்ள ஊழல் பேர் வழிகள் ஊடுருவாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். இது மிக முக்கியமானது. இந்தப் பணியினை காங்கிரஸ் தொண்டர்கள் மிக்க கவனத்துடன் செய்ய வேண்டும்.

கட்சித் தேர்தல்களை அணுகுவதில் நாம் பாதி அளவு தான் வெற்றி பெற்றிருக்கிறோம். இன்னும் பலர் நம்மிடம் வந்து சேர வேண்டியிருக்கிறது. அவர்களையும் ஈர்த்துக் கொண்டு வரவாம். இதை முடித்தபின் மக்களிடம் செல்ல வேண்டும்.

அப்படி மக்களிடம் செல்லும்போது நம் மீது மக்கள் நம்பிக்கையும் மரியாதையும் வைக்கும்படியான சூழ்நிலையை உருவாக்க வேண்டும்.

இதைச் செய்ய நாம் தவறுவோமேயானால் நம்மீது மக்கள் நம்பிக்கை இழப்பார்கள் எனவே, யாரால் நம்பிக்கைஉணர்வை ஊட்டமுடியுமோ அத்தகையவர்களையே நம் கட்சிப் பொறுப்புகளில் அமர்த்த வேண்டும்.

### யார் பலவான்?

ஜனவரி 31-ம் தேதிக்கு முன்பு இருந்த நிலைமை வேறு அதற்குப் பிறகு இருக்கும் நிலைமை வேறு. திமுக அரசு டிஸ்மிஸ் செய்யப்பட்ட பின்னர் பல சந்தர்ப்பவாதிகள் நமது காங்கிரஸ் கட்சிக்குள் நுழைய முயல்கிறார்கள். ஆள் உயர மாலைகளை எடுத்துக்கொண்டு நம்மைத் தேடி ஓடிவருகிறார்கள். அந்த மாலைகளைக் கண்டு மயங்கினால் காங்கிரஸ் கட்சியின் மரியாதையே போய்விடுமென எச்சரிக்கிறேன்.

மக்கள் தலைவர் காமராஜரால் உருவாக்கப்பட்ட தொண்டர்கள் நாம். எனவே மக்கள் சேவைக்காக நம்மை முழுமையாக அர்ப்பணித்துக கொள்ளவேண்டும். மக்கள் நம்மிடம் நிறைய எதிர்பார்க்கிறார்கள். அந்த நம்பிக்கைக்கு நம்மை தகுதியுள்ளவர்களாக ஆக்கிக்கொள்ள வேண்டும்.

நாம் ஒன்றாக இணைந்தபிறகும் சக்தியற்றவர்கள் என்ற நிலைமை உருவாகுமானால் எதிர்காலத்தில் காங்கிரஸ் இருக்காது. தேசவிரோத சக்திகள்தான் தலைதூக்கும். வருங்கால சந்ததி நம்மை மன்னிக்காது. இதைஉணர்ந்து நாம் செயல்பட்டாகவேண்டும்.

நம்மில் யார் பலவான் என்ற போட்டிக்குஇடமில்லை. நாம் எல்லோருமே பலவான்கள்தான் என்பதை பரீட்சித்துப் பார்க்க நமது எதிரிகள் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள், நமக்குள்ளே போட்டி மனப்பான்மை உருவாகுமானால் நமது எதிரிகளுக்கு இடம் கொடுத்ததாகி விடும்.

இனி இரு காங்கிரஸ் என்ற உணர்வையே மறந்து ஒரே காங்கிரஸ் என்ற உணர்வுடன் தான் நாம் பணியாற்றவேண்டும். தமிழகத்தில் ஒரு காங்கிரசைத் தவிர வேறு காங்கிரஸ் இல்லை என்ற நிலையை நாம் உருவாக்கிடவேண்டும்.

### வறட்சிப் பணிகள்

தமிழகத்தில் பல்வேறு மாவட்டங்களில் இன்னமும் கடும் வறட்சி நிலவுகிறது. மக்கள் பெரும் அவதிக்குள்ளாகியிருக்கிறார்கள். பம்பாய் மாநிலத்தில் காங்கிரஸ தலைவர் ரஜினிபடேல் தமிழக வறட்சி நிவாரணத்திற்கென்று ஒரு லட்சம் ரூபாய்கள் கொடுத்திருக்கிறார். அகில இந்திய காங்கிரசும் ஒரு லட்சம் ரூபாய்கள் கொடுத்துள்ளது. நாமும் கணிசமாக நிதி திரட்டியாக வேண்டும். ஏழை எளிய மக்கள் வாழும் பகுதிகளில் குடிநீர் கிணறுகளை தோண்டும் வேலையை காங்கிரஸ் தொண்டர்களே செய்ய வேண்டும். தமிழக மக்களின் துயர் துடைக்கும் பணியில் முழு மூச்சுடன் ஈடுபடும்படி ஒவ்வொரு காங்கிரஸ் தொண்டரையும் கேட்டுக் கொள்கிறேன்.

### விசாரணைக் கமிஷன்

அறநிலையங்களில் தி.மு.க. ஆட்சிக்காலத்தில் நடைபெற்ற ஊழல்களை விசாரிக்க விசாரணைக் கமிஷன் அமைக்கப்பட்டுள்ளதை வரவேற்

(4-ம் பத்தி பார்க்க)

# தி. மு. க. மீது பரிவு ஏற்பட அதிகாரிகள் சதியா?

சேலம், ஏப். 27— சேலம் மாவட்டத்திற்கு வறட்சி நிவாரணக் குழு வருகைதந்து ஆத்தூர் தாலூகா தலைவாசல் யூனியனில் பல இடங்களுக்கு சென்று ஆத்தூர் பயணிகள் விடுதிக்கு திரும்பியது பொதுமக்கள் குழுவினரை சந்தித்து மகஜர்கள் அளிக்க முடியாததால் மாவட்ட அதிகாரிகளே மகஜர்களைப் பெற்றுக்கொண்டனர். இதனை விவசாயிகள் வேதனையோடு தெரிவித்தனர்

திமுக அரசு இருந்த 9 ஆண்டு காலமாக மின்துறையில் சர்சார்ஜ், பிக்சட்டெப்பாசிட் முதலியன வசூலிக்கப்படாமல் விடப்பட்டது. 9 ஆண்டுகளாக வசூலிக்கப்படாத வரியை இப்பொழுது ஒரே மூச்சாக வசூலக்க முயற்சிக்கின்றனர். பீஸ் கேரியரை கழட்டுவது; ஜப்தி என மிரட்டுவது போன்ற நடவடிக்கைகளில் "கெடுபிடி" செய்வது திமுக அரசே நல்ல அரசு என்று செய்துவிட முயற்சி செய்கின்றார்களோ என்ற சந்தேகம் ஏற்பட்டுள்ளது என்றார்கள்.

மேலும் சொஸைடி கடன் வசூல் செய்யும்போது பயிர்கள் பூட்டை வாங்கும் சமயமாக இருந்தால் என்ஜினகளையோ இறவை மாடுகளையோ ஜப்தி செய்யக் கூடாது என கலெக்டர் கூறியும் கெடுபிடி ஜப்தி—தொடர்கிறது. தாண்டாக் கவுண்டம் பாளையத்தை சேர்ந்த ஒரு விவசாயியின் நிலத்தில் பயிர் பூட்டை வாங்கும் தருணத்தில் ஆயில் என்ஜினை சொஸைடி கடனுக்காக ஜப்தி செய்தனர். இது போல ஏராளமான விவரங்கள் தர முடியும் என்றனர்

இங்கே காத்திருந்த மக்கள் குழுவினரிடம் மனுகர இயலாமல் ஏமாற்றத்துடன் திரும்பினர், இந்த வறட்சி நிவாரண குழுவில் மத்திய அரசின் விவசாய இலாகா ஜாயிண்ட் செகரட்டரி முகர்ஜி நிதி இலாகா ஜாயிண்ட் செகரட்டரி [illegible]வரன் ஆகியோர் வந்திருந்தனர். இவர்களுடன் தமிழ் அரசு அதிகாரிகளும் மாவட்ட அதிகாரிகளும் சென்றனர்

# உங்கள் குரல்

### ஓட்டலில் புதுவகை மோசடி

ஐயா!

சென்னை, அம்பீஸ் கேபில் சாப்பிட வருபவர்களிடம் 4 சத விகிதம் விற்பனை வரி வசூலிக்கப்படுகிறது. மற்ற ஓட்டல்களில் இப்படி வசூலிப்பதாகத தெரியவில்லை மேலும், இந்த ஓட்டலில் அரசு அறிவித்த உத்தரவுக்கு மாறாக சட்னி, சாம்பார் இரண்டும் கொடுக்காமல் ஒன்றை மட்டும் கொடுக்கிறார்கள். மற்றொன்று கேட்டால் 5 காசு அதிகம் தேவை என்று கேட்கிறார்கள் இப்படி பார்த்தால் ஒவ்வொரு பொருளுக்கும் 10 காசு அதிகம் தர வேண்டியிருக்கிறது.

உதாரணமாக சாதாவடை இல்லை என்று கூறி ஸ்பெஷல் வடை 45 காசு என்று விற்கிறார்கள். சாம்பார் கேட்டால் அதற்கு 5 காசு அதிகம் தரவேண்டும் பில் போடும் போது விற்பனை வரி 2 காசும் சேர்த்து 52 காசு போடுகிறார்கள். இப்படிக் கவனித்தால் முன்பு அவர்கள் விற்றவிலையேதான் வருகிறது, எனவே ஓட்டல் முதலாளிகள் சாமார்த்தியமாக மக்களை ஏமாற்றுகிறார்கள்.

மேலும் ஒவ்வொரு ஓட்டலிலும் ஒரு புகார் புத்தகம் வைக்கவேண்டும். அதிகாரிகள் அதைப் பார்த்து நடவடிக்கை எடுக்க வசதியாக இருக்கும்.

உணவுப் பண்டங்களை எடை போட்டுப் பார்க்க தராசு வைக்கவும் ஏற்பாடு செய்யவேண்டும்.

எம். ஜி. செல்வராஜ்,
இயக்குநர்,
ஜார்ஜ் டவுன் கூட்டுறவு வங்கி, சென்னை-1

### 300 குடும்பம் அவதி

ஐயா!

சதர்ன் பிரிக் ஒர்க்ஸ் தொழிற்சாலையில் கடந்த 22—3—76 முதல் லே-ஆப் விட்டிருக்கிறார்கள். இது சம்பந்தமாக கவர்னருக்கும் மற்ற அதிகாரிகளுக்கும் ஏற்கனவே மனுக்கள் கொடுத்திருக்கிறோம். லே-ஆப் காரணமாக வேலையில்லாமல் சுமார் 300பேர்களின் குடும்பத்தினர் ஒரு மாதமாகக் கஷ்டப்படுகிறார்கள். கடந்த 21-4-76 அன்று பிரதமருக்கும் கவர்னருக்கும, தலைமைச் செயலாளருக்கும் மத்திய அமைச்சர் ரகுநாத ரெட்டிக்கும் தந்தி கொடுத்திருக்கிறோம்.

1. கே. அசரய்யா ஜேக்கப் தலைவர், சதர்ன் எம்ப்ளாயீஸ் யூனியன்.
2. எம். மணி, செயலாளர்,
3. பி. சௌந்தர பாண்டி துணைச்செயலாளர்

## சஞ்சய் அணி பாத யாத்திரை

சென்னை, ஏப். 27—தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் ஏழை எளிய மக்களுக்கு பயன்படும் வகையில் தங்கம் வெள்ளி நகைகள், மற்றும் பித்தளைப் பாத்திரங்களை ஈடாக வைத்துக்கொண்டு கடன் உதவி செய்ய வேண்டும் என்று மாநில காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர் பகவதி பாண்டியன் கேட்டுக்கொண்டார்.

பல்லாவரம் இளைஞர் அணி சார்பில் குரோம்பேட்டையில் இளைஞர் காங்கிரஸ் பிரமுகர் மா. முத்துசாமி தலைமையில் பாதயாத்திரை நடந்தது. நியூ காலனியைச் சேர்ந்த வட்டிக்கடைக்காரர் இனி மேல் அரசு நிர்ணயித்த வட்டியை வாங்குவதாக பாதை யாத்திரைக் குழுவினரிடம் தெரிவித்தார்.

பாதயாத்திரையில் சஞ்சய் அணித் தலைவர் இராம. நடராசன், துணைத் தலைவர் பழனி, சுப்பிரமணியன், கோபாலகிருஷ்ணன், செயலாளர் பி. மணிவண்ணன், எஸ். எஸ். பி. சதாசிவம், சிவாஜி சுந்தரராஜன், கே. பத்மனாபன், வி. எம். பழநிவேல் ஆகியோர் கலந்து கொண்டனர்.

கைக்களஞ்சாவடியில் எஸ். எஸ். பி. சதாசிவம் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் மா. முத்துசாமி, பகவதி பாண்டியன் பேசினர். உன்னிகிருஷ்ணன் நன்றி கூறினர்.

## வரதட்சணை - ஆடம்பரம் மறுப்போர் சங்கம்

சென்னை, ஏப். 27—வரதட்சணை-ஆடம்பரம் மறுப்போர் சங்கத்தின் முதலாவது கூட்டம் சென்னையில் நடந்தது.

சென்னை, வட ஆற்காடு, செங்கல்பட்டு ஆகிய மாவட்ட பிரதிநிதிகள் இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டார்கள்.

வரதட்சணைக்கு எதிர்ப்பாக சென்னை நகரம் முழுதும் கூட்டம் நடத்தி பிரச்சாரம் செய்ய கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

ஆடம்பரமாக திருமணச் செலவுகள் செய்வதை தவிர்க்கவும் பிரச்சாரம் செய்ய கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

இந்த சங்கத்திற்கு அமைப்பாளர் ஒருவரை நியமனம் செய்ய சங்கத்தின் செயலாளர் வி. எஸ். ஸ்ரீகுமாருக்கு கூட்டத்தில் அதிகாரம் வழங்கப்பட்டது.

இதுபோன்ற குறிக்கோள்களை கொண்ட சமூக மத ஸ்தாபனங்களின் ஒத்துழைப்பை பெறவும் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

கல்லூரிகளில் வரதட்சணை மறுப்பு கூட்டங்கள் நடத்தவும் சங்கக் கூட்டத்தில் தீர்மானம் செய்யப்பட்டது.

### நோட்டீஸ் போட்டு

# விவசாயிகளின் நிலம், வீடு ஏலம்

## அதிகாரிகள் கெடுபிடி

நீலகிரி, ஏப். 27—ஏழை விவசாயிகளுக்கு கொடுத்த கடன்களை வசூலிப்பதில் கூட்டுறவு விவசாய வங்கிகளும், வருவாய்த்துறை அதிகாரிகளும் கெடுபிடி காட்டி வருகிறார்கள். விவசாயக் கடன்களை வசூலிக்க விவசாயிகளின் சொத்துக்களை ஏலம்போடவும் வீடுகளில் ஜப்தி செய்யவும் நோட்டீஸ் போட்டு நடவடிக்கை எடுத்துவருவது விவசாயிகள் மத்தியில் மிகுந்த துயரை ஏற்படுத்தியுள்ளது.

கடந்த இரண்டு ஆண்டுகளுக்கு மேல் நீலகிரி மாவட்டத்தில் பருவ மழை இல்லாததால் மிகவும் வறட்சி ஏற்பட்டுள்ளது. இதனால் குடியானவர்களின் நிலை மிகவும் சீர்கேடு அடைந்துள்ளது.

இந்த நிலையில் கூட்டுறவு சங்கங்களும் வருவாய்த் துறை அதிகாரிகளும் விவசாயிகளுக்கு கொடுத்த கடன்களை வசூலிப்பதில் அதிக கெடுபிடி காட்டிவருவதாகக் கூறப்படுகிறது.

விவசாயிகளின் சொத்துக்கள் ஏலம் போடப்படுகின்றன. அவர்கள் வீடுகளில் உள்ள குத்துவிளக்கு முதல் சமையல் பாத்திரங்கள், குழந்தைகளின் கோலுசுகள் வரை எல்லாப் பொருள்களும் ஜப்தி செய்யப்படுகின்றன.

ஜப்தி செய்யப்பட்ட பொருள்களும் நோட்டீஸ் விடப்பட்டு பகிரங்க ஏலத்தில் விடப்படுகின்றன.

ஏழை விவசாயிகள் பல்வேறு பிரச்னைகளில் மூழ்கிக் கொண்டிருக்கும்போது அதிகாரிகளும் விவசாயக் கூட்டுறவு வங்கிகளும் இவ்வாறு கெடுபிடி செய்வது தாங்க இயலவில்லை என்று விவசாயிகள் குறிப்பிடுகின்றனர்.

தங்கள் நிலையை அரசு உடனடியாகக் கவனித்து ஆவன செய்ய வேண்டும் என்றும் கோரிக்கை விடுத்துள்ளனர்.

## சிவாஜி ரசிகர் மன்ற செயற்குழு கூட்டம்

சென்னை, ஏப். 27—சிவாஜி ரசிகர் மன்ற செயற்குழுக் கூட்டம் இம்மாதம் 2ம்தேதி கூடுகிறது என்று அதன் பொதுச் செயலாளர் புரசை குமரன் அறிவித்துள்ளார்.

செயற்குழுக் கூட்டம் தஞ்சை மாவட்டத்திலுள்ள திருப்பந்துருத்தியில் சின்ன அண்ணாமலை தலைமையில் நடைபெறும்.

திருப்பந்துருத்தியில் நடக்க இருக்கும் பயிற்சி முகாம் பற்றிய ஏற்பாடுகளைச் செய்ய இந்தக் கூட்டத்தில் முடிவுகள் எடுக்கப்படும்.

## காங்கிரஸ் பிரமுகர் காலமானார்

மாயவரம். ஏப். 27—காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த டாக்டர் ஜி. குருமூர்த்தி என்பவர் மாரடைப்பால் மரணமடைந்தார். அவருக்கு வயது 55.

மாயவரத்திலுள்ள சேந்தங்குடி வெள்ளாளத் தெருவில் அவர் வசித்து வந்தார்.

மாயூரம் நகரசபைத் தலைவர் எஸ். அபுல் அசன், துணைத் தலைவர் தருமலிங்க படையாச்சி, எம். எம். பக்கர் எம். எல். சி. தம்பி தேவேந்திரன், பாலசுந்தரம் உள்பட பலர் இறுதிச் சடங்கில் கலந்து கொண்டு மாலை வைத்து அஞ்சலி செலுத்தினர்.

# மேல்சபைதேர்தல்: காங்கிரஸ் கட்சிக்கு வெற்றிக்குமேல் வெற்றி

பாட்னா, ஏப். 27—பீகாரில் சட்டமன்ற மேலவைக்கு நடைபெற்ற தேர்தலில், அறிவிக்கப்பட்ட எல்லா இடங்களிலும் காங்கிரஸ் வேட்பாளர்களே வெற்றிபெற்றனர்.

இதுவரை 4 இடங்கள் அறிவிக்கப்பட்டன. காங்கிரஸ் வெற்றிபெற்ற இந்த நான்கு இடங்களும் இதற்கு முன்பு எதிர்க் கட்சிகளிடம் இருந்தன.

மற்ற இடங்களின் வாக்குகள் எண்ணப்படுகின்றன.

உ. பி. யில் ஸ்தலஸ்தாபன தொகுதிகளிலிருந்து மேலவைக்கு நடைபெறும் தேர்தல்கள் நடைபெற்றன.

இதுவரை எண்ணப்பட்டவைகளில் காங்கிரஸ் அதிக இடங்களை கைப்பற்றியிருக்கிறது.

## மாநகராட்சி பள்ளிகளுக்கு

## ரூ. 32 லட்சம் செலவில் புதிய கட்டிடங்கள்

சென்னை, ஏப். 27—சென்னை மாநகராட்சி பள்ளிகளுக்கு ரூ. 32 லட்சம் செலவில் புதிய கட்டிடங்கள் கட்டப்பட்டுள்ளன.

சென்னை மாநகராட்சி 349 ஆரம்ப நடுநிலை பள்ளிகளையும், 34 உயர் நிலைப்பள்ளிகளையும் நடத்திவருகிறது. இவற்றில் 59 பள்ளிகள் வாடகைக் கட்டிடங்களிலும், 98 பள்ளிகள் ஷிப்டு முறையிலும் நடத்தப்பட்டு வருகின்றன.

கூடுதல் வகுப்பறைகளை கட்டி இட நெருக்கடியைப் போக்கவும் ஷிப்டு முறையை நீக்கவும் மேற்கொள்ளப்பட்ட அடிப்படையில் 119 வகுப்பறைகள் கொண்ட புதிய கட்டிடங்கள் ரூபாய் 32 லட்சம் செலவில் மாநகராட்சி கட்டியிருக்கிறது.

இதனால் கூடுதலாக 5 ஆயிரம் மாணவர்களுக்கு இடவசதி கிடைக்கும்.

இந்த கட்டிடங்களின் திறப்பு விழா இம்மாதம் 30-ந் தேதி நடக்கிறது.

நிருபர்களை அழைத்துச்சென்று இந்தக் கட்டிடங்களைக்காட்டிய தனி அதிகாரி டி. வி. அந்தோணி மேற்கண்ட தகவல்களை தெரிவித்தார்.

## தொடக்கப் பள்ளி ஆசிரியர் செயற்குழு

சேலம், ஏப். 27— ஆசிரியர்களிடையே போட்டி அமைப்புகளை உருவாக்கிய தி.மு.க. ஆட்சியை அகற்றிய இந்திய ஜனாதிபதி பிரதமர் ஆகியோருக்கு தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள் கூட்டணி நன்றி கூறி இருக்கிறது.

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர்கள் கூட்டணியின் சேலம் தாரமங்கலம் வட்டாரக்கிளை செயற்குழு கூட்டம் இம்மாதம் 9ம் தேதி நடைபெற்றது.

சங்கத்தின் துணைத்தலைவர் தே. பக்தவத்சலம் தலைமை வகித்தார்.

ஆசிரியர்களிடையே பிளவை உண்டாக்கி போட்டி அமைப்புகளை உருவாக்கிய திமுக அரசை கண்டித்தும், பிரதமரின் 20 அம்ச திட்டத்தை வரவேற்றும், ஒன்றிய நிர்வாகத்தின் பணிக்கு நன்றி கூறியும் சங்கத்தின் செயலாளர் எஸ். பி. நாகராசா கொண்டுவந்த பல தீர்மானங்கள் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டன.

### விவசாயிகள் வரி பாக்கி

# பாத்திரங்களை ஜப்தி செய்த அதிகாரிகள்: மரகதத்திடம் புகார்

அரக்கோணம், ஏப். 27— அரக்கோணத்தை யடுத்த இச்சிபுதூர் கிராமத்தில் விவசாயிகளின் வரி பாக்கிக்காக செம்பு பாத்திரங்களை அதிகாரிகள் ஜப்தி செய்தனர் என்று அகில இந்திய காங்கிரஸ் பொதுச் செயலாளர் மரகதத்திடம் விவசாயிகள் புகார் கூறியிருக்கின்றனர்.

சிலைக்கு மரகதம் சந்திரசேகர் மாலையணிவித்தார்.

பொது மக்களின் குறைகளை நேரில் கேட்டறிய நேற்று அரக்கோணத்திலும் சுற்றுப்புற கிராமத்திலும் மரகதம் சந்திரசேகர் பாதயாத்திரை செய்தார்.

அரக்கோணம் நகரசபை கவுன்சிலர்களான ராஜகோபாலன், ஜெயராஜ், நகர காங்கிரஸ் செயலாளர் ராஜ ராஜன், டாக்டர் சத்தியமூர்த்தி, தாலுகா காங்கிரஸ் செயலாளர் திருநாவுக்கரசு, சிவாஜி ரசிகர் மன்ற செயலாளர் நத்மல் ஜெயின், நகரசபை தலைவர் ராஜா, துணைத் தலைவர் சாமிநாதன் ஆகியோர் மரகதம் சந்திரசேகர் வரவேற்றனர்.

வடஆற்காடு மாவட்ட காங்கிரஸ் தலைவர் பலராமன் அவருடன் பாதயாத்திரை மேற்கொண்டார்.

அரக்கோணம் நகருக்கு அருகே உள்ள அம்மை நகரில் உள்ள அரிஜன காலனியை மரகதம் சந்திரசேகர் சுற்றிப் பார்த்தார்.

### 500 புகார் மனுக்கள்

அரிஜனங்கள் சார்பில் சுமார் 500 மனுக்கள் மரகதத்திடம் கொடுக்கப்பட்டன.

மனுக்களை பெற்றுக் கொண்ட மரகதம் சந்திரசேகர் பேசியதாவது:

உங்களை எல்லாம் நான் பார்க்கும்போது மிகமகிழ்ச்சி அடைகிறேன்.

உங்களையெல்லாம் பார்க்கும்போது நீங்கள் எல்லாம் தாழ்த்தப்பட்டவர்கள் என்று கூற முடியாது. அந்த அளவு நீங்கள் முன்னேறியுள்ளீர்கள்.

உங்களது குழந்தைகள் நல்லமுறையில் படித்து முன்னேற வழி செய்யப்படவேண்டும்.

தையல்வேலை மற்றும் சில கைத்தொழில்களை பெண்கள் கற்றுக்கொள்ளவேண்டும்.

நீங்கள் கொடுத்துள்ள மனுக்களில் கூறப்பட்டுள்ள குறைகளை நிவர்த்தி செய்ய என்னாலான உதவிகளை செய்கிறேன்.

அரக்கோணம் சவாய்பேட்டையிலுள்ள காமராஜ்

### சட்டத்தை உடைப்பதா?

அங்கு கூடியிருந்த கூட்டத்தில் பேசுவதற்காக ஒலிபெருக்கி வசதி செய்யப்பட்டிருந்தது.

ஒலிபெருக்கியை அப்புறப்படுத்தச் சொல்லிய மரகதம் பேசியதாவது:

'மைக்' வைத்து பொதுக் கூட்டம் போடக் கூடாது என்று நாமே சட்டத்தைப் போட்டுவிட்டு அதை நாமே உடைக்கக் கூடாது என்றார் மரகதம்.

மக்கள் தெரிவித்த குறைகளை கவனித்து ஆவன செய்வதாக மரகதம் கூறினார்.

### ஜப்தி

அரக்கோணத்தை அடுத்த இச்சிபுதூர் கிராமத்தில் மரகதம் பாத யாத்திரை செய்தார்.

திரளான விவசாயிகள் அவரை வரவேற்றனர்.

தங்களின் வரி பாக்கிக்காக வீட்டிலிருந்த செம்பு பாத்திரங்களை வருவாய்த்துறை அதிகாரிகள் ஜப்தி செய்தனர் என்று மரகதத்திடம் விவசாயிகள் முறையிட்டனர்.

தமிழக நிலை குறித்து பிரதமர் இந்திராவிடம் எடுத்துக் கூறி பரிகாரம் காண்பதாக அவர்களிடம் மரகதம் உறுதி கூறினார்.

# போர்ச்சுக்கல் தேர்தல்: அமெரிக்க ஆதரவு கட்சி வெற்றி

லிஸ்பன், ஏப். 27—போர்ச்சுக்கல் நாட்டில் ஐம்பது ஆண்டுகளுக்குப் பின்னர் நடந்த தேர்தலில் சோஷலிஸ்ட் கட்சிக்கு 106 இடங்கள் கிடைத்திருக்கின்றன. கம்யூனிஸ்ட் கட்சிக்கு 40 இடங்கள் கிடைத்திருக்கின்றன.

போர்ச்சுக்கல் பார்லிமெண்டில் 263 இடங்கள் இருக்கின்றன. 50 ஆண்டுகளாக நடந்த சர்வாதிகார ஆட்சியை ராணுவப் புரட்சி தூக்கி எறிந்தது. அதன் பின்னர் அரசியல் நிர்ணய சபைத் தேர்தல் நடந்தது.

தற்போது பார்லிமெண்டுக்குப் பொதுத் தேர்தல் நடந்தது. இந்தத் தேர்தலில் சோஷலிஸ்ட் கட்சிக்கு 106 இடங்கள் கிடைத்த போதிலும் தனிப் பெரும்பான்மை கிடைக்கவில்லை.

மக்கள் ஜனநாயகக் கட்சிக்கு 71 இடங்களும், சமூக ஜனநாயக மத்தியக் கட்சிக்கு 41 இடங்களும், கம்யூனிஸ்டு கட்சிக்கு 40 இடங்களும் கிடைத்தன.

கம்யூனிஸ்டுகட்சியைஎதிர்க்கும் கட்சிகளுடன் சேர்ந்து கூட்டணி மந்திரி சபை அமைக்கப் போவதாக சோஷலிஸ்ட் கட்சித் தலைவர் மரியோ—சோர்ஸ் கூறினார்.

இந்தத் தேர்வில் எப்படியாவது சோஷலிஸ்ட் கட்சியும், இதர மிதவாதக் கட்சிகளும வெற்றி பெற அமெரிக்க உளவு இலாகா (சி ஐ ஏ.) ல சக்கணக்கான பணத்தைக் கொட்டியது.

பிரபல அமெரிக்கப் பத்திரிகையான "நியூயார்க் டைம்ஸ் இதனை ஆதாரத்தோடு அம்பலப்படுத்தியது.

இத்தாலிய சோஷலிஸ்டு கட்சிக்கும், போர்ச்சுக்கல் சோஷலிஸ்ட் கட்சிக்கும் தாங்கள் பண உதவி செய்தது உண்மைதான என்பதை அமெரிக்க உளவு இலாகாவே ஒப்புக்கொண்டது.

என்றாலும் சென்ற ஆண்டு அரசியல் நிர்ணய சபைக்குத் தேர்தலில் வாங்கிய ஓட்டுக்களைவிட சோஷலிஸ்ட் கட்சி குறைவான ஓட்டுக்களே பெற்று இருக்கிறது.

சோஷலிஸ்ட் கட்சியால் நிலையான மந்திரிசபை அமைக்க முடியுமா என்பது வேறு எந்தக் கட்சி அந்தக் கட்சியோடு ஆட்சி அமைக்க ஒப்புக் கொள்கிறது என்பதைப் பொறுத்து இருக்கும்.

## தென் ரெயில்வே புதிய ஜெனரல் மானேஜர்

சென்னை ஏப். 27—தெற்கு மண்டல ரெயில்வேயின் புதிய ஜெனரல் மானேஜராக எஸ். எம். கவுரி சங்கர் பதவி ஏற்றிருக்கிறார்.

இதற்கு முன்னதாக தென் ரெயில்வே ஜெனரல் மானேஜராக இருந்த எம் ஆர். ரெட்டி நீண்டகால விடுமுறையில் சென்றுள்ளார்.

எனவே புதிய ஜெனரல் மானேஜராக கவுரி சங்கர் நியமனம் செய்யப்பட்டிருக்கிறார்.

## அண்ணா தி.மு.க. ஊழியர் கொலைவழக்கு

சேலம், ஏப். 27— சேலம் வீரபாண்டி இரட்டைக் கொலை வழக்கு சம்பந்தமாக கொலையுண்ட அண்ணா தி.மு. கழகப் பிரமுகர் சுகுமாரின் சித்தப்பாவும் சேலம் மாவட்ட தி. மு. க. செயலாளர் ஆறுமுகத்தின் சகோதரருமான குப்புசாமி, இவரது மனைவி, முத்துப்பெண், இவரது சகோதரி பாப்பாத்தி உள்பட சிலர் கைது செய்யப்பட்டுள்ளனர். இவர்களில் குப்புசாமியின் மனைவியை ஜாமீனில் விடக்கோரி சேலம் செஷன்ஸ் கோர்ட்டில் மனு தாக்கல் செய்யப்பட்டது. மனுவை ஏற்றுக்கொண்ட நீதிபதி முத்துப்பெண்ணை நிபந்தனையுடன் ஜாமீனில் விடுதலை செய்தார்.

# வறட்சி நிவாரணத்துக்கு ரூ. 19 கோடி தேவை: தமிழக அரசு கோரிக்கை

சென்னை, ஏப். 27—தமிழக வறட்சி நிவாரணத்துக்கு ரூ. 19கோடி தேவை என்று தமிழக அரசு கோரியுள்ளது.

தமிழகத்தில் வறட்சி குறித்து ஆராய்வதற்காக மத்திய நிபுணர்கள் குழு ஒன்று வந்திருக்கிறது.

நிதி இலாகா இணைச் செயலாளர் வி. பி. ஈஸ்வரன், விவசாய இலாகா இணைச் செயலாளர் எஸ். கே. பார்ஜி ஆகியோர் இந்தக் குழுவில் உள்ளனர்.

கடந்த 5 நாட்களாக இந்தக் குழுவினர் வறட்சிப் பகுதிகளான கோவை, மதுரை, ராமநாதபுரம், தர்மபுரி, திருநெல்வேலி மாவட்டங்களில் சுற்றுப்பயணம் செய்தனர்.

சுற்றுப்பயணத்தை முடித்துக் கொண்டு நிபுணர் குழுவினர் கவர்னரின் ஆலோசகர்கள் மற்றும் அதிகாரிகளுடன் விவாதம் நடத்தினர்.

விவாதத்தின் போது தமிழக வறட்சி நிவாரணத்துக்காக ரூ. 19 கோடி தேவை என்று நிபுணர் குழுவிடம் தெரிவிக்கப்பட்டது.

விவாதத்தில் ... காரியதரிசி கார்த்திகேயன், நிதிச் செயலாளர் ...ன், வருவாய்த்துறை செயலாளர் சி. வி. எஸ். மணி, வறட்சி நிவாரண கமிஷனர் ... மற்றும் தலைமை எஞ்ஜினீயர்கள் கலந்து கொண்டனர்.

வறட்சி நிவாரண திட்டங்களையும் தமிழக அரசு வகுத்துள்ளது.

### நாளைய நிகழ்ச்சிகள்

வித்ய பாரதி டிரஸ்ட் சென்னை கலாச்சார விழா துவக்கம்! துவக்குபவர்; பி. கே. தவே. 162, ராயப்பேட்டை நெடுஞ்சாலை மயிலாப்பூர் மாலை 6-30 மணி

பெண்கள் தொழில் கூட்டுறவு சங்கம்: சுய வேலைவாய்ப்பு திட்ட துவக்க விழா; தலைமை: கமலகாராவ் தையல் இயந்திரங்களை வழங்குபவர்; பி.கே. தவே 162, ராயப்பேட்டை நெடுஞ்சாலை மயிலாப்பூர் இரவு 7-45 மணி

# பழைய காங்கிரசுக்கு தி. மு. க. நிதியா?

சென்னை, ஏப். 27— ஊழியர் கூட்டங்களில் பழைய காங்கிரசுக் கட்சியினர் கொடுக்கின்ற பணத்தைத் தி.மு.க. பணம் என்று குற்றம் சாட்டுகின்றனர். இனி அவர்களால் நிரூபிக்க முடியுமா என்று பழைய காங்கிரஸ் தலைவர் பி. ராமச்சந்திரன் காட்டமாகக் கேட்டார்.

சென்னை, எண்ணூர் கத்திவாக்கத்தில் பழைய காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில் கலந்துகொண்டு அவர் மேலும் கூறியதாவது:

"நமது தொண்டர்கள் கொடுக்கின்ற நிதியால் கட்சியைக் கட்டிக் காத்துவருகிறோம். இதனைக் கண்டு சிலர் பொறாமைப்படுகிறார்கள். ஊழியர்கள் தரும் பணத்தை தி.மு.க. பணம் என்கின்றனர்.

நாம் ரகசியமாகவா பணம் வசூலிக்கிறோம்?

இதற்குக் கணக்கு வைத்திருக்கிறோம். காரியக் கமிட்டியில் கணக்குக்கொடுக்கிறோம். தி.மு.க. பணம் என்று சொல்கின்றவர்கள் இந்தக் குற்றச்சாட்டை நிரூபிக்க முடியுமா?"

இவ்வாறு பி. ராமச்சந்திரன் பேசினார்.

## சூதாடிய 18பேர்கைது

பரமக்குடி, ஏப். 27—பரமக்குடியில் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் கே. முத்துசாமி, இவரின் பெரும் முயற்சியின் பயனாக ஏராளமாக பணம் வைத்து சூதாடும் இடங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

வாணிய தெருவில் உள்ள ஒரு வீட்டினுள் பணம்வைத்து சூதாடியதாக பெருமாள் உட்பட 7 பேர்கள் கைது செய்யப்பட்டனர். 107 ரூபாயும் கைப்பற்றப்பட்டது.

அடுத்து, அப்துல்ராவுத்தர் தெருவில் உள்ள ஓர் வீட்டில் பணம் வைத்து சூதாடியதாக பிச்சை சேர்வை உட்பட 11 பேர்கள் கைது செய்யப்பட்டனர். 105 ரூபாய் கைப்பற்றப்பட்டது.

பரமக்குடி சப்-மாஜிஸ்திரேட் பி. சோமசுந்தரம் இவர்கள் மீதுள்ள வழக்குகளை விசாரித்து, ஒவ்வொருவருக்கும் 20 ரூபாய்வீதம் அபராதம் விதித்தார்.



# ஆபாச திரைப்படம்: பல லட்சம் கொள்ளை

ஆர். டி. கடாட்சம்

**சென்னை நகரில் ஆபாச திரைப் படங்கள் ரகசிய முறையில் காட்டப்படுகின்றன என்று தெரிகிறது. இதன் மூலம் பல லட்ச ரூபாய் களை இந்த படத் தயாரிப்பாளர்கள் கொள்ளையடிக்கிறார்கள் என்று புகார் கூறப்படுகிறது.**

அமோக வரவேற்பை கவனத் தில் கொண்டு திரைப்படங் களில் ஆபாசக் காட்சிகளைப் புகுத்தி 'அடல்ட்ஸ் ஒன்லி' படங்கள் ஒருபக்கம் வெளி வந்து கொண்டிருக்க 'புளு பிலிம்' என்ற பட்டப் பெயரில் நிர்வாண திரைப்படங்கள் எடுக்கப்பட்டு அவை ரகசிய மாக திரையிடப்படுகின்றன.

நிர்வாண திரைப்படங்கள் எடுத்து கொள்ளை லாபம் அடிப்பதில் ஒரு கும்பலே ஈடு பட்டிருக்கிறது.

டெல்லி, கல்கத்தா, பம் பாய், ஹைதராபாத், ஆமதா பாத், சென்னை ஆகிய நகரங் களில் ஒரு ரகசிய சங்கிலித் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டு நிர்வாண திரைப் படங்களை வெளிநாடுகளுக்கு கடத்தல் செய்தும் வெளி நாட்டு 'புளு பிலிம்'களை இந்தியாவுக்கு கடத்தி வரும் செயல்களிலும் ஈடுபட்டிருக் கின்றன.

அவசர நிலை பிரக டனம் அமுலுக்கு வந்ததும் போலீசாரின் இரும்புக்காம் இந்தக்கும்பலின்குரல்வளையை நெருக்க ஆரம்பித்ததும் இவர் களின்நடவடிக்கைகள்மிகவும் ரகசியமான முறையில்நடந்து வருகின்றன.

நிர்வாண திரைப்படக் காட்சிகளை அறவேஒழிப்பதில் இந்தியாவின் 'ஸ்காட்லண்டு யார்டு' என்றழைக்கப்படும் சென்னை போலீசார் தீவிர மாக ஈடுபட்டிருக்கிறார்கள். நகரத்தில்அவ்வப்போதுதிடீர் சோதனைகளை நடத்தி இந்த சமூக விரோதக் கும்பலை வேட்டையாடி வருகிறார்கள்.

சென்ற ஆண்டில் மட்டும் சுமார் 15-க்கும்மேற்பட்டவர் கள் (சில பெண்கள் உள்பட) போலீசாரால் பிடிபட்டனர்.

## பிரபல நடிகை

சென்னை அடையாறு பகுதி யில் உள்ள ஒரு சொகுசு பங்காவில் நிர்வாண திரைப் படக் காட்சி நடந்து கொண் டிருந்தபோதே போலீசார் அங்குசோதனையிட்டுபலரைப் பிடித்தனர். அப்போது அந்த பங்களாவின் வேறொரு பகுதியில் "கோபரேட்டான்ஸ், விபசாரம்— இத்யாதியும் நடந்து கொண்டிருந்ததாம். இதன் முக்கியஸ்தர் ஒரு பிர பல சினிமா நடிகையும் அவ ரின் கணவனும் என்ற விஷய மும் அப்போதுதெரியவந்தது. என்று கூறப்படுகிறது.

நிர்வாண சினிமா படங்கள் ரகசியமாக எடுக்கப்பட்டு ரக சியமாகவே திரையிடப்படு கின்றன. குறிப்பிட்ட ஆசாமி களிடம் தலா ரூபாய் 50முதல் 100 ரூபாய் வரை வசூலிக் கிறார்கள். காமக்களியாட் டங்களில் வேட்கையுடைய உல்லாசிகள், செல்வந்தர்கள் பலர் அதற்கென்றே 'கிளப்பு களை'யும் அமைத்துக்கொண்டு குடும்பங்களுடன்இந்ததிரைப் படங்களை போட்டு ரசிக்கிறார் கள். இதிலே இவர்களுக்கு ஒரு "கிக்" கிடைக்கிறதாம்.

சுமார் 30 நிமிஷங்களுக்கு குறையாமலும் 2 மணிநேரத் திற்கு அதிகமாகாமலும் இந்த புளு பிலிம்கள் காட்டப் படுகின்றன.

## களியாட்டம்

வழக்கமான களியாட்டங் களில் திருப்தி அடையாத ஆண்களும் பெண்களும் சிற் றின்பத்தில் உவகைகொண்ட வயோதிகர்கள், பணக்காரர் கள் இந்த சினிமாப்படங்களை பார்ப்பதில் ஆர்வம் செலுத் துகிறார்கள் என்று ஒரு சோத னையில் பிடிபட்டவர்களிடம் நடத்திய விசாரணையில் தெரிய வந்தது.

இந்தியாவின் முக்கிய நகரங்களான டெல்லி, கல் கத்தா, பம்பாய், ஆமதா பாத், ஹைதராபாத், பெங் களூர், சென்னை ஆகிய நகரங் களில்இத்தகையதிரைப்படங் கள் காட்சிகள் அன்றாடம் நடை பெற்றுக்கொண்டுதான் இருக் கின்றன. வெளிநாடுகளுக் கும் முக்கியமாக அராபியா நாடுகள், விசேஷமாக துபாய்க்கு இந்தியாவிலிருந்து நிர்வாண திரைப் படங்கள் மறைமுகமாக ஏற்றுமதி செய் யப்படுகின்றன என்று சொல் லப்படுகிறது.

நிர்வாண திரைப்பட காட்சி களுக்கு ஏற்பாடு செய்வது, திரையிடுவது ஆகியவை குற்ற மாக இருப்பினும் இந்தியன் பினல் கோட் (I P C) 292 ன் படி, நிர்வாண திரைப்படங் கள் வைத்திருப்போர் குற்ற வாளிகளாக கருதப்படாமல் இருப்பது விசித்திரம் தான். இவர்கள் ஒரு அடையாள அபராதம் விதிக்கப்பட்டு விடப்படுகிறார்கள் இவ்வாறு 20 பேர்கள் சென்ற ஆண்டு பம்பாயில் தண்டனைக்குள்ளா னார்கள்.

பிடிபட்ட நிர்வாணதிரைப் படங்களும் நீதிமன்றங்களின் உத்தரவுபடி அழிக்கப்படுகின் றன.

சென்னை போன்ற நகரங்க ளில் விபசார விடுதிகளே பெரும்பாலும் இந்த திரைப் படக் காட்சிகளை நடத்துகின் றன. சில விபசார தரகர்க ளும், அழகிய பெண்களும் இதில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆனாலும் இவர்களுக்கு பண பலமும் ஆட்பலமும்கொண்ட 'பாஸ்கள்' உண்டு என்று தெரிகிறது.

## செல்வ சீமான்கள்

மகாராஜாக்கள் மற்றும் செல்வச்சீமான்கள் குடும்பங் களில் நிர்வாண திரைப்படங் கள் பார்ப்பது ஒரு நாகரிக மாகவே கருதப்படுகிறது. அதிக விலை கொடுத்து இந்த திரைப்படங்களை வாங்கி விரும்பும்போதெல்லாம்திரை யிட்டு ரசிக்கிறார்கள். அந்த குடும்பத்தில் உள்ள இளம் வயது ஆண்கள், பெண்கள் அனைவருமே உடல் உறவு சம் பந்தப்பட்ட காட்சிகளை பார்த்து இன்புறுகிறார்கள். ஆனால் இத்தனையும் ரகசிய மாகவே அனுபவிக்கிறார்கள்.

நிர்வாண வண்ணத் திரை படங்கள் ஐரோப்பிய நாடு களிலிருந்து கடத்திவரப்படு கின்றன. 20 நிமிடங்கள் ஓடும் 8 எம்.எம். சுருள் ஒன்று ரூபா 300 அல்லது 400க்கு விற்கப்படுகின்றன. என்று கூறப்படுகிறது. இந்த சினிமா படங்கள் திரையிடப் படும் காட்சிக் கூடங்களில் மதுவும் மங்கையும் தாராள மாக பரிமாறப் படுகின்றன என்று கூறப்படுறது. இந்தப் பெண்கள் விபசாரத்தை நாசுக்காக நடத்தும் "கால் கேர்ல்ஸ்" தான்.

## சாவி

இந்த "புளு பிலிம்"ஸை திரையிட்டு ரசிக்கும் ஒரு கூட் டம் நூதனமான முறையில் கேளிக்கை ஆட்டங்களை அனு பவிக்கிறது. என்று சொல்லப் படுகிறது. இதற்கென்று இவர்கள் ரகசியமாக ஒரு சங்கத்தையும் நடத்து கிறார்கள். சங்கத்தின் உறுப் பினர்கள் அவர்களின் கார் சாவிகளை ஒரு கிண்ணத்தில் போட்டுவிட்டு மீண்டும் கிண் ணத்தில் கையைவிட்டு ஏதா வது சாவியை எடுக்கிறார் கள்.

சாவியை எடுக்கும் உறுப்பி னர் அந்தச் சாவியின் சொந் தக்காரரின் மனைவியுடன் சல்லாபிக்கலாம். இப்படி ஒவ்வொருவரும் தங்களுக் கிடைத்த சாவியின் சொந்தக் காரர் மனைவியுடன் இன்புற லாம். என்று கூறப்படுகிறது. இப்படி தங்கள் மனைவி களையே மாற்றி மாற்றி அனு பவிக்கிறார்கள். இதற்கு ஒரு சங்கம் அதுவும் ரகசியமான முறையில் இருக்கிறதாம்.

## அமோக கிராக்கி

இந்தியாவில் தயாரிக்கப் பட்ட நிர்வாண திரைப்படங் களுக்கு அயல் நாடுகளில் அமோக கிராக்கி ஏற்பட்டி ருக்கிறது. அதிக செலவு செய்து வெளியிடப்படும் பொதுக் காட்சிகளுக்கான திரைபடங்கள் சில வேளை களில் தோல்வியடைந்து நஷ்டமடைகின்றன.

ஆனால் அதிக செலவு செய்து எடுக்கும் நிர்வாண திரைப்படம் லட்சக்கணக் கான ரூபாய் லாபத்தைக் கொடுக்கிறது. அதனாலேயே ரகசியமாக பலர் இதில் ஈடுபடு கிறார்கள்.

## பிடிபட்ட பெண்கள்

பம்பாயிலுள்ள ஒரு ஓட்டலில் போலீஸ் திடீர் சோதனை நடத்தியபோது ஏராளமான அழகிய பெண்கள் விபசாரத் தடுப்புச் சட்டத்தின்கீழ் பிடி பட்டனர். இந்தப் பெண்களை நடிக்கவைத்து ரகசியமாக நிர்வாண திரைப்படங்கள் தயாரித்துவந்ததும் அப்போது கண்டுபிடிக்கப்பட்டது.

இந்தியாவில் நிர்வாண திரைப்படங்கள் பெரும்பா லும்பூனாவில் தான் தயாரிக்கப் படுகின்றனவாம். பம்பா யிலும் ஒரு பிரபல திரைபட நடிகை நிர்வாண திரைபடம் எடுக்கும் கும்பலில் முக்கிய அங்கம் வகிக்கிறாள். இந்த நடிகை சென்னையிலும் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறாள் என்று சொல்லப்படுகிறது. பல லட்சம் ரூபாய் பெறு மான சொகுசு பங்களாக் களுக்கு சொந்தக்காரிகளாய் இருக்கும் நடிகைகளும் "புளு பிலிம்"களில் நடித்து சுலப மாக பணம் சம்பாதிக்கிறார் களாம்.

சினிமாவில் "சான்ஸ்" கிடைக்காத சில அழகிய பெண்கள் இப்படி "புளு பிலிம்களில்" நடித்து விரை வில் அதிக பணம் சேர்த்துக் கொள்கிறார்கள்.

ஒரு சினிமா நடிகை தன் படுக்கை அறையையே நிர் வாண திரைபட அரங்க மாகவும் திரைப்படம் சுடப் படுவதற்கு ஏதுவான ஏற்பாடுகளுடன் அமைத் திருக்கிறார் என்று கூறப்படு கிறது.

நிர்வாண திரை படங்களை தயாரித்து அயல் நாடுகளுக்கு அனுப்புவதன்மூலம் இந்த கும்பல் லட்சக்கணக் கான ரூபாய்களை கையாளு கிறது. இதில் தீவிர பங்கு கொண்டு இருக்கும் ஒரு பிர பல திரைபட அதிபதி ரகசிய மாக நிர்வாண திரைபடங் களை எடுத்துவருகிறாராம். பல ஸ்டார் ஓட்டல்களுக்கு சொந்தமான இவரிடத்தில் இல்லாத அயல்நாட்டு பொருள்களே இல்லை என லாம், அழகு சாதனம் மற்றும் அலங்காரப்பொருட் கள், ரேடியோ, டெலிவிஷன் பெட்டிகள், மின்சார சாத னங்கள் அத்தனையும் அயல் நாட்டு சரக்குகளாம்.

புளு பிலிமகளில் நடிக்கும் பெண்களுக்கு கண்ணை மூடிக் கொண்டு லட்சக்கணக்கான பணத்தை அள்ளி வீசுகிறார் களாம.

சமீபத்தில் துபாய் நாட்டு அராபியர் ஒருவர் இந்தி நடிகை ஒருவருக்கு நிர்வாண மாய் திரைப்படத்தில் "போஸ்" கொடுத்தாலே போதும். அதற்காக பல லட்சங்கள் கொடுக்க முன் வந்தாராம். துபாய் நாட் டில் இத்தகைய படங்களுக்கு நல்ல கிராக்கி என்று கூறப் படுகிறது.

## ஏற்றுமதி செய்வது எப்படி?

இந்த சமூக விரோத கும்பல் நிர்வாண திரைப்படங்கள் எடுப்பதில் பல தந்திரங்களை கையாளுகின்றன. என்று சொல்லப்படுகிறது.

சாதாரண திரைப்படங்கள் எடுக்கும்போது "காபரே டான்ஸ்"களைபுகுத்திநிர்வாண காட்சிகளை படமாக்குகின் றனர். என்று கூறப்படுகிறது. இந்தப் படங்கள் தணிக்கைக்குச் செல்லும் போது நிர்வாண காட்சிகள் துண்டிக்கப்பட்டு தணிக்கை முடிந்ததும் துண்டிக்கப்பட்ட நிர்வாண காட்சிகள் இணைக் கப்படுகின்றன. இந்தப்படங் கள் ஏற்றுமதி செய்யப்படும் போது சுருள் சுருள்களாக அனுப்பப்படும் படங்கள் பூராவையும்சுங்க அதிகாரிகள் சரிவர சோதனை செய்ய முடிவ தில்லை. ஏற்கனவே பெறப் பட்ட தணிக்கை குழுவின் சான்றிதழ்கள் பேரிலும் சுங்க இலாகா இந்த நிர்வாணதிரை படங்களை ஏற்றுமதி செய்ய அனுமதிக்கிறது என்று சொல் லப்படுகிறது.

## கேமரா ட்ரிக்

பம்பாயில் ஒரு செல்வந்தர் வீட்டுக் கல்யாணத்துக்குச் சென்றிருந்த பிரபல இந்தி நடிகைகள் 2 பேருக்கு ஒரு புதிய அனுபவம் ஏற்பட்டது அங்கே ரகசிய மாக திரையிடப்பட்ட நிர் வாண திரைப்படம் ஒன்றை பார்த்துகொண்டிருந்த இந்த நடிகைகளுக்கு தூக்கி வாரிப்போட்டது- தாங்களும் அந்தப் படத்தில் நடித்திருந் ததுதான்.இதுபற்றி அதிர்ச்சி யடைந்த அந்த நடிகைகள் போலீசாருக்கு தகவல் கொடுக்க—போலீசார் ஜரு ராக விசாரித்ததில் ஒரு ரகசி யத்தை கண்டுபிடித்தனர்.

இந்த 2 நடிகைகளும் அவ் வாறு எந்த நிர்வாண திரைப் படங்களிலும் நடிக்கவில்லை என்றும், வேறு அழகிய பெண் களை நடிக்கவிட்டு—பின்னர் அந்த பெண்களின் உடலு

(7ம் பத்தி பார்க்க)

சூரியகிரகணம்

# கடல் குளிப்பு: அதிகாரிகள் எச்சரிக்கை

சென்னை, ஏப் 27— வரு கிற 29-ம் தேதி சூரிய கிர கணத்தன்று கடலில் குளிக்கச் செல்பவர்கள் ஆழமான இடத்திற்குச் செல்லக் கூடாது என்று அதிகாரி கள்எச்சரித்துள்ளனர்.

திருவல்லிக்கேணி கடற் கரை, ஐ. ஜி. அலுவலகத் திற்கு எதிரே, சாந்தோம் ஆகிய மூன்று இடங்களிலும் முதல உதவி செய்ய ஏற்பாடு கள் செய்யப்பட்டுள்ளன.

# விருந்து கட்டுப்பாட்டை மீறிய பெரியமனிதர்கள்: கவர்னரிடம் புகார்

**சேலம், ஏப் 27—சேலம் அழகாபுரத்தில் நடந்த அரிமா சங்க மாநாட்டில் விருந்து கட்டுப்பாடு சட்டம் மீறப்பட்டிருப்பதாக புகார் எழுந்துள்ளது**

சேலம் நகரின் அருகில் அழகாபுரம் ரத்னவேல் கவுண் டர் கல்யாண மண்டபத்தில் நடந்த லயன்ஸ்கிளப் மாநாட் டிற்கு லயன்ஸ்கிளப் கவர்னர் டாக்டர் சுகவனம் தலைமை வகித்தார். இம்மாநாட்டிற்கு வருபவர்களுக்காக நகரில் உள்ள பெரிய லாட்ஜுகளின் அறை கள் எல்லாம் ரிசர்வ் செய்யப் பட்டிருந்தன. மாநாடு நடந்த மண்டபத்தின் முன் சுமார் 300க்கும் மேற்பட்ட கார்கள் நின்றன. மாநாட்டையொட்டி இரண்டு விதமான அருமையான விருந்துகள் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தன. சைவவிருந்தும் அசைவ விருந்தும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. சைவ விருந்தைவிட அசைவவிருந் துக்குத்தான் "கூட்டம்" அதிகமாம். இந்தவிருந்து மெடிகல் அசோசியேஷன் கட்டிடத்தில் நடந்தது. இவ் வளவு கூட்டமாக விருந்து நடப்பதைக் கண்டோர் அனை வரும் அதிர்ச்சியடைந்தனர்.

கவர்னர் விருந்து கட்டுப் பாடு சட்டத்தை மீறிய 'லயன்ஸ் சங்கத்தினர்' மீது நடவடிக்கை எடுக்கவேண்டும் என்ற கோரிக்கை எழுந்துள் ளது. இருவித விருந்துகளி லும் ஒரு வேளைக்கு 400 பேர் களுக்கு குறையாமல் சாப் பிட்டுள்ளனர் என்பது குறிப் பிடத்தக்கது.

இது பற்றிய புகார்கள் எழுந்துள்ளன.

# அரிசி வியாபாரி படுகொலை: வாலிபருக்கு 10 வருட சிறை

விழுப்புரம், ஏப். 27— அரிசி வர்த்தகர் ஒருவரை கழுத்தில் கயிற்றை இறுக்கி கொலை செய்ததாக வாலிபர் ஒருவருக்கு 10 ஆண்டுக கடுங் காவல் தண்டனை விதிக்கப பட்டது.

சைக்கிளில் அரிசிவர்த்தகம் செய்பவர் ராஜாராம்.

அரிசி அளந்து போடுவது சம்பந்தமாக இவருக்கும் பெருமாள் என்பவருக்கும் தகராறு ஏற்பட்டது. ராஜா ராமின் கழுத்தில் ஒரு கயிறறைப்போட்டு இறுக்கி னாராம. இதனால் மூச்சுத் திணறி உயிரிழந்த ராஜா ராமன் உடலை சாக் குப்பையில் கட்டி முந்திரி தோப்பில் போட்டுவிட் டாராம்.

தகவலறிந்த போலீசார் பெருமாளைக் கைதுசெய்து வழக்கு தொடர்ந்தனர்.

வழக்கைவிசாரித்த மாஜிஸ் திரேட், பெருமாளுக்கு 10 வருடங்கள் காவல் தண்டனை விதித்து தீர்ப்பு கூறினார்.

முஜிபுரை ஒழித்துக்கட்டிய

# கொலைகார ராணுவ அதிகாரி மீண்டும் வருகை

கல்கத்தா, ஏப். 27— முஜிபுர் ரகிமானையும், அவரது குடும்பத்தினரையும் ஒழித்துக் கட்டிய கொலைகார ராணுவ அதிகாரிகள் மீண்டும் வங்க தேசம் வந்திருக்கிறார்கள்.

முஜிபுரை கொன்ற இவர் கள் லிபியா நாட்டுக்கு தப்பி ஓடியிருந்தனர்.

டாக்கா நகரம் முழுவதும் இவர்களது வருகை பற்றிய பேச்சாகவே இருப்பதாக, உலக பாங்க் அதிகாரி ஒருவர் கல்கத்தாவில் கூறினர்.

இவர்களது வருகைமூலம் வங்க தேசத்தில் புதுமாறுதல் கள் எதுவும் நிகழலாம் என்று மக்கள் கருதுவதாக வும் அந்த அதிகாரி தெரிவித் தார்.

4-ம் பத்தி தொடர்ச்சி

டன் இந்த நடிகைகளின் தலைகளை இணைத்து "கேமரா டிரிக்ஸ்" செய்து நிர்வாணப்படம் எடுத்திருந் தது கண்டு பிடிக்கப்பட்டது.

இவ்வாறு மோசடியில் ஈடுபடும். இந்த சமூக விரோதக்கும்பலை தயவுதாட் சண்யம்காட்டாமல்போலீசார் வேட்டையாடி வருவதைக் தொடர்ந்து பம்பாயில் இந்த நிர்வாண திரைபட மோசடிக் கும்பலின நடவடிக்கைகள் குறைந்து வருகின்றன. சென்னையில் 90 சதவிகிதம் ஒழிக்கப்பட்டுவிட்டதாக சொல்லப்படுகிறது.

### தி. மு. க. ஆட்சிக் காலத்தில்

### கோடிக்கணக்கில் நட்டத்தை ஏற்படுத்திய

# மின் சப்ளை இழப்பை தடுக்க நடவடிக்கை

**மதுரை, ஏப். 27—தி. மு. க. ஆட்சிக் காலத்தில் மின் சப்ளை செய்யப்படும்போது ஏற்படும் "டிரான்ஸ்மிஷன் லாஸ்" என்ற இழப்பு அளவுக்கு மீறி 22 சதவிகிதத்தை எட்டியதால் ஏற்பட்ட பல கோடி ரூபாய் நஷ்டத்தைத் தவிர்க்க துரித நடவடிக்கைகள் எடுக்கப்படவிருப்ப தாக மின்வாரியத் தலைவர் எம். எம். ராசேந்திரன் கூறினார்.**

மதுரையில் மின் வாரிய குறை தவிர்ப்புத் திட்டத்தின் கீழ்நடந்த விழாவில் பேசிய அவர் இத்தகவலை வெளியிட் டார்.

மின்சார இலாகாவில் மின் சார உற்பத்தி ஆகும் இடத் தில் இருந்து மின்சாரத்தைப் பயன்படுத்தும் இடத்திற்கு செல்கிறதுள் இயற்கையா கவே டிரான்ஸ்மிஷன்லாஸ்' என்ற மின்இழப்பு ஏற்படும்.

இந்த மின் இழப்பு சாதா ரணமாக ஒரு திறமையான நிர்வாகத்தின் கீழ் 8 சதவகி தம் முதல் 12 சதவிகிதம் வரைதான் இருக்கும்.

ஆனால் திமுக ஆட்சிக் காலத்தில் டிரான்ஸ்மிஷன் லாஸ் 22 சதவிகிதத்திற்கும் அதிகமாயிருந்தது. இந்த இழப்பில் ஒரு சதவிகிதம் குறைக்கப்பட்டால் மின்சார வாரியத்திற்கு ஒரு கோடி ரூபாய் லாபம் கிடைக்கும.

ஆனால், இத்தக்குறை திமுக ஆட்சியில் தவிர்க்கபடாத தால் ஆண்டுக்கு மின்சார வாரியத்திற்கு சுமார் ரூ. 10 கோடி வரை நஷ்டம் ஏற்பட் டிருக்கிறது.

## ராமானுஜம் கோரிக்கை

இந்திய தேசிய தொழிற்சங்க காங்கிரஸ் தலை வர் அண்மையில் மதுரையில் பேசியபோது மின்சார வாரி யத்தில் கவனிக்கப்படாமல் இருக்கும் "டிரான்மிஷன் லாஸ்" பற்றிக் குறிப்பிட்டு வாரியத்தின் நிர்வாகத் தையே தலைகீழாக மாற்றி யமைக்கவேண்டும் என்று கோரினார்.

அதன் விளைவாக மதுரை யில் மின்வாரிய குறை தவிர்ப்பு திட்ட விழாவில் கலந்து கொண்டு பேசிய மின் வாரிய தலைவர் ராசேந்திரன் இதற்கு பதிலளித்தார்.

அப்போது அவர் கூறிய தாவது!—

தமிழ்நாட்டில் மின்சப்ளை செய்யப்படும் போது "டிரான்ஸ்மிஷன் லாஸ்" அதிகமாகியிருப்பதும் அது தவிர்க்கப்பட்டால் மின்வாரி யத்திற்கு பல கோடி லாபம் வரும் என்பதும் உண்மை தான். அதில்ஐயப்பாட்டிற்கு கொஞ்சமும் இடமில்லை. எனவே தமிழ்நாட்டில் அந்த இழப்பைத் தவிர்க்க துரித மானநடவடிக்கைகளை எடுத்து வருகிறோம். ஆங்காங்கே ஏராளமான சப்-ஸ்டேஷன் களை நிறுவி விநியோக டிரான்ஸ்பார்மர்களையும் அமைத்து அந்த இழப்பை தவிர்க்க முயற்சி எடுத்து வரு கிறோம்.

இவ்வாறு எம்.எம்.ராசேந் திரன கூறினார்.

## லஞ்ச ஊழல் ஒழிப்பு

விழாவில்தொடர்ந்து அவர் பேசுகையில் மின்சாரவாரியத் தில் லஞ்ச ஊழல் இருந்தால் அதை உடனுக்குடன் ஒழித் துக்கட்ட பொதுமக்கள் ஒத் துழைக்க வேண்டும் என்றும் இதற்காகவே நியமிக்கப்பட் டுள்ள தலைமை உஷார் பிரிவு அதிகாரிக்கோ அல்லது எனக்கோ ஊழல் புகார்களை நேரடியாக தெரிவிக்கலாம் என்றும் அவர் தெரிவித்தார்.

## மின் திருட்டு

கிராமங்களிலும் மற்ற நிறுவனங்களிலும் நடை பெறும் மின் திருட்டு பற்றி குறிப்பிட்ட அவர் இதனை தவிர்க்க பொதுமக்கள் பெரு மளவில் ஒத்துழைக்க வேண் டும் என்று கேட்டுக்கொண் டார்.

# இருபது அம்சத்திட்டம்: அண்ணா தி. மு. க., அனைத்துக் கட்சி குழு

**சென்னை, ஏப். 27—இருபது அம்சத் திட்ட செயல் "கண்காணிப்புக் குழு" ஒன்றை அண்ணா தி.மு. க வும், அனைத்துக் கட்சியினரும் அமைத்துள்ளனர்.**

செங்கற்பட்டு மாவட்டம், திருவொற்றியூரில் 20 அம்சத் திட்டத்தை செயல்படுத்த "கண்காணிப்புக் குழு" ஒன்றை அனைத்துக் கட்சியி னர் அமைத்துள்ளனர்.

டி. பலராமன் (காங்கிரஸ்) தலைவராகவும், எஸ். தனசேக ரன் (இந்திய கம்யூனிஸ்ட் கட்சி) துணைத் தலைவராகவும், உ. தங்கசாமி (அண்ணா தி. மு. க.) செயலாளராக வும், பி. டெல்லி (இந்திய கம்யூனிஸ்ட் கட்சி) துணைச் செயலாளராகவும், கோ. மோகனராஜ் (அண்ணா தி. மு. க.) பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள னர்.

செயற்குழு உறுப்பினர் களாக அண்ணாதி.மு.க.வை சேர்ந்த மு. பலராமன், ம... சண்முகம், கெ. முனுசா... காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த பி. திருப்பதி, ...க்கிஸ்டேனி யல், சி. மா...மணி, எம். ராஜகோபால், இந்திய கம் யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த வி. கண்...பன், இ. பால சூரியன், ம. சி, வி, சரவண மூர்த்தி ஆகியோர் தேர்ந் தெடுக்கப்பட்டுள்ளனர்.

# ... மு. க. வினர் சாராய விற்பனை

சதுரங்கப்பட்டினம், ஏப். 27— சதுரங்கப்பட்டினத்தில் வீதிக்கு வீதி சாராயக் கடை கள் இருப்பதாகவும், இவை களில் பெரும்பாலான கடை களை தி. மு. க. வினர் நடத்தி வருவதாகவும் கவர்னருக்கும் மாவட்டக் கலெக்டருக்கும் புகார் அனுப்பப்பட்டுள்ளது.

மதுவிலக்கை அதிகாரிகள் சரியாக அமல்படுத்தாமல் கள் ளச்சாராய வியாபாரிகளுக் குத் துணை போகும் போக்கில் இருப்பதாக கூறப்பட்டுள்ளது.

இதுகுறித்து தகுந்த நட வடிக்கை எடுக்குமாறு கவர் னருக்கும் மாவட்ட ஆட்சித் தலைவருக்கும் புகார் அனுப்பப் பட்டுள்ளது.

Printed by S. V. G. Sowrirajulu, at the M.C P.P.S. Press, No. 1, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor:
K. SOMASUNDRAM, (SOLAI)